ஶ்ரீரஸ்து

ஶ்ரீமத்கவி

# வேங்கடஸூரி ஸ்வாமி

## சரித்திரம்.



श्रीमत्कवि वेंकटसूरि स्वामिन् चरित्रो.

ஸௌராஷ்ட்ர விப்ரபந்து
கு. வெ. பத்மநாபய்யர் அவர்களால்
இயற்றப்பட்டு,

மதுரை, ஸௌராஷ்ட்ர ஸபையாரால்
வெளியிடப்பட்டது.

ஸௌராஷ்ட்ர விஜயாப்தம் 630.

பதிப்புரிமை] 1942. [விலை அணா 12

ஸ்ரீ:

ஸ்ரீஜத் (S. N. D.)

சித்தா. நா. தேவேந்திர அய்யர்

அவர்களின் ஸ்வர்க்காரோஹண ஞாபகார்த்தமாக

இப்புஸ்தகம் வழங்கப்பட்டது.

சித்திரபானு௵ புரட்டாசி௴ 12௳

(28—9—1942)

ஸௌராஷ்ட்ர பக்தவிஜயம் [பகுதி 2.]

श्रीरस्तु

ஸ்ரீமத்கவி

# வேங்கடஸூரி ஸ்வாமி

## சரித்திரம்

---

**श्रीमत्कवि वेंकटसूरि स्वामिन् चरित्रो.**



ஸௌராஷ்ட்ர விப்ரபந்து
கு. வெ. பத்மநாபய்யர் அவர்களால்
இயற்றப்பட்டு,
மதுரை, ஸௌராஷ்ட்ர ஸபையாரால்
வெளியிடப்பட்டது.

---

ஸௌராஷ்ட்ர விஜயாப்தம் 630.

 1942. [விலை [illegible]

ஓம்

ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹாய நம:

ஸ்ரீமத்குரு வேங்கடஸூரி ஸ்வாமிகள்.

ஸ்ரீஸூரி ஸ்வாமிகளை ஆதரித்த
தஞ்சை மஹாராஷ்ட்ர மன்னர்
மாஹிமிக்க சிவாஜி மஹாராஜா அவர்கள்.

[ஆட்சி: 1833—1855]

# முகவுரை

நமது சமூகத்தில் 124 வருஷங்களுக்கு முன் ஐயம பேட்டைக்கடுத்த (ஒரு குக்கிராமம்) இராமச்சந்திரபுரத்தில் "நல்லோர்க ளெங்கே பிறந்தாலு மென்" என்ற பழமொழிக் குறுதியான நிரூபணமாய் அவதரித்து பல்கலைக்கிடமாம் கலைமகளுறையும் விலையிலாத் தாமரை மலரெனத்தகும் நாவினைப்படைத்து அவ்வாணியின் தலைவனும் ஞானேதயத் துக்கு ஆதாரமாதலால் உற்பத்திக்குரியவனெனப் பெயர் படைத்தவனுமான பிரம்மாவின் அநுக்கிரகத்தாலும், வித்யா காரகனான புதன் நாலிலுச்சமாயிருக்கப்பெற்ற பாக்கியத் தாலும் மானிலத்துதித்த காலத்தே ஞானமுவக்கும் பாவினைப் பாடத் திறமை வாய்ந்த ஸ்ரீ ஸ்ரீ வேங்கடசூரியவர்களின் சரித்திரத்தையும், ஒப்புஉயர்வற்று அவரால் அருளப்பட்ட இராமாயணம் முதலிய பெருமைபெறும் நூல்களையும் இது வரை நாம் மறந்திருக்க, இனி சின்னாட்களில் அழியுமென வறிந்து மனம் துடிக்கவும், நம் சமூகத்தவர் கலாசாஸ்திர (Literature) சூனியரெனும் நிந்தையை மாற்ற சிந்தை நடிக்கவும், இகத்துக்கு இன்றியமையாத பொருளீட்டலையும் மறந்து அருமையான தன் காலத்தில் சிலவற்றை இக் காரியத்தில் செலவிடத் துணிந்து தம்மூக்கமே ஆதாரமாகக் கொண்டு இவ்வளவு அளவிறந்த தப்சீல்களை நமக்குச் சேகரித்துக்கொடுத்த ஸ்ரீ ஸ்ரீ கு. வெ. பத்மநாபய்யருக்கு நாம் மனமுவந்து வந்தனமளிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

சமூக முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது சமூகப் பெரியார்களின் திவ்ய சரித்திரங்களேயாம். சரித்திர

---

தப்சீல் = சுருக்கவிவரம்.

ஆதாரங்களின்றி முன்னேற்றம் அமையாது. ஆதலின், நமது மஹான்களின் சரித்திர நூல்கள் பல வெளிவரவேண்டும். அப்போதுதான் நமது சந்ததியாரை நல்வழியிற் செலுத்தினவர்களாவோம்.

உலகெலாம் திரண்டு ஒருமுகமாயினும், மானிடர் ஒத்து வேற்றுமை சிதையினும், நீணிலம் சிறந்து வானிடமாயினும், ஞானமுவந்த மாணவர் பெருமை பேணியிருத்தல் வீணெனத் தகாது.

| | | |
|---|---|---|
| "மணி பீடம்" | | **என். ராமஸ்வாமி அய்யர்,** |
| தியாகராஜ நகர். | } | ரிடையர்டு சப் ஜட்ஜு, |
| 12—1—1941. | | மதருஸ். |

கு³ரு ஸ்தோத்ரு.

कैलाशेश्वरुलेक्तगङ्गमाकिनिं भागीरथीहोय्यवि
फुळ्ळुज्जानुकुतेभगीरतपती जन्मोत्तरणीन्सोकन्
वाणीवागमृतप्रवाहुमुतोकन् सौराष्ट्रविद्यान्दिये
श्रीमद्वेंकटसूरिवर्युनुकपुल् वन्दुस्सदाभक्तिरु ॥

—— ஸ்ரீமத்கவி வெங்கடரமணஜீ.

# சாற்றுப்பா

## நேரிசை ஆசிரியம்

மலர்தலை யுலகின் மக்கட் பிறப்பிற்
சிலர்தலை சிறந்து திகழுதல் யாண்டும்
எம்மதத் துள்ளும் எச்சாதி யுள்ளும்
அம்ம! உண் டிதனை யவரவ ரறிவர்
தேச உழைப்பிற் சிற்சில ருயர்ந்தனர்
ஈசன் வழிபாட் டிற்சில ருயர்ந்தனர்
அடியவர் பணியில், அரசு செய்தலில்,
நெடியசெல் வத்தில், நெறித்தவ றின்மையில்,
படிப்பில், ஆண்மையில், பாஷாபி விருத்தியில்,
நடிப்பில், நாதசங் கீத முழக்கில்,
மெய்ஞ்ஞா னத்தில், விதவித மாகிய
விஞ்ஞா னத்தில் விரித்தினு முறையாப்
பலவேறு துறையில் பலவே றிடத்தில்
பலவேறு காலம் பரவின ருயர்ந்தோர்.
அவற்றுள், இற்றைக் காண்டுகள் பலமுன்
தவத்தர் புகழுந் தண்டமிழ்ச் சோழ
நாட்டைச் சார்ந்த நலம்பெறும் அய்யம்
பேட்டைக் கணித்தாய்ப் பிறங்கும் இராமச்
சந்திர புரத்தில் ஸௌராஷ்ட்ர தேஸஸ்த
மந்திரப் பிராஹ்மண வகுப்பில் சுகுணம
தங்க மஹாமுனி தந்திடு மரபில்
ரங்க நாயகி தேவியும் நாரண

சருமா வுஞ்செய் தவப்பய னுக
ஒருமா புனித முடைய தினத்தில்
வேங்கட ஸூரியென் விழுமிய பெயரைத்
தாங்கிடச் செனித்த தனியனு மொருவன்
அன்னவ னுடைய அற்புதச் சரிதையைப்
பன்னருஞ் சிரமப் பட்டுத் தெரிந்து
யாவரும் படிக்க அச்சிட் டுதவினுன்
தேவரும் விரும்பும் திவ்வியச் சேத்திர
மாகிய மதுரை யம்பதிக் கரும
யோகி யெனத்தகு முத்தம நண்பன்
மிதமிலா அன்பன் விப்பிர பந்து
பதுமநா பப்பெயர் பரவுசுந் தரனே.

செங்கற்பட்டு, }
26—3—41. }

இங்ஙனம்,
ஸ்வாமி சுந்தர பாரதீ.

## கு³ரு ஸ்தோத்ரு.

కైలాశేశ్వరుశిక్త గంగమకినిం భాగీరథీ హాయ్యావి
పుళ్ళుజ్ఞానుకుతే భగీరథపతీ జనోత్మత్రరణ్ణీన్యాకః ।
వాణీవాగమృతప్రవాహములోకః సౌరాష్ట్ర విద్యాబ్ధియొ
శ్రీమద్వేంకటసూరి వర్యునకపుల్ వస్తుస్సదా భక్తిరు ॥

—— ஸ்ரீமத்கவி லக்ஷ்மணஸூரி.

venkata suri svami 1 to 66 101213
Friday, December 13, 2013 8:04:14 PM

*மதுரை கீதா நிலைய ஸ்தாபகரும், வேதாந்த சாஸ்திரங்களிலும், ஸாஹித்யப் புலமையிலும் சிறந்த*

## ஸ்ரீஜத் தொ. ரா. பத்மநாபய்யர் அவர்கள் ஸ்ரீமத் கவி வேங்கடஸூரி ஸ்வாமிகளின் பேரில் இயற்றிய (வெண்பா) தோத்திரப்பாக்கள்.

வேங்கட ஸூரியெனும் வித்துவசி ரோமணிக்கே
பாங்குடனே தோத்திரங்கள் பாடுவோம்—நீங்குடலை
விட்டுப் புகழுடம்பு மேதினியிற் றன்விளங்க
மட்டவிழ நிற்குமிவர் மாண்பு

மாண்புயர்ந்த நல்ல வரகவியாய்த் தானிருந்து
காண்பரிய சாத்திரங்கள் சற்றவனைச்—சேண்பரவும்
தீரபுரு டோத்தமனும் சீராம நற்சரிதை
சார மொழிந்தவனைச் சாற்று

சாற்று முபாசனையிற் சார்ந்துநர சிங்கனையே
போற்றி வழிபட்ட புண்ணியனைப்—போற்றுவோம்
ஏற்றுவோ மென்றும் இசையெடுத்துப் பாடுவோம்
வேற்றுமை யின்றி விரைந்து

விரைந்து கருணைமிக மேவுமா ராய்ச்சி
பரந்த கவியரசர் பாடல்—சுரந்தபால்
கன்னலுந் தேன்போல் கனிந்திரசத் தின்சுவையெவ்
வின்னலையும் நீக்கிடுமாம் ஈது

ஈதல் பொருளீட்டல் இன்பமும் வீடெனவே
ஓதுபுரு டார்த்தநான் கோக்கவே—மேதினியில்
தந்தருளும் இவ்வாசான் தன்சரிதை தந்தவிப்ர
பந்துவையும் போற்றிடுவோம் பண்பு.

*கீதா நிலையம்,*
*மதுரை.*

**T. R. பத்மநாபய்யர்,**

*விக்ரம—மாசி—25.*

ஸ்ரீவில்லிபுத்தூர் கோடி கன்னிகாதானம்
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ தாதாச்சாரியாரவர்களால் செய்யப்பட்ட தனியன்

श्रीकारुण्य पयोधि चन्द्र ममलं वेदान्तसारार्थदम्
नादान्तानु भवं रमापति कृपा साहित्य वष्मा कृतिम् ।
श्रीमान्वेंकटसूरि नामसहितं सौराष्ट्र विप्रोत्तमम्
बोधानुग्रह दिव्य मङ्गळकरं वन्दे गुरुं शाश्वतम् ॥

ஸ்ரீகாருண்ய பயோதி4 சந்த்3ரமமலம்
வேதா3ந்த ஸாரார்த2த3ம்
நாதா3ந்தானு ப4வம் ரமாபதி க்ருபா
ஸாஹித்ய வஷ்மாக்ருதிம் ।
ஸ்ரீமான் வேங்கடஸூரி நாமஸஹிதம்
ஸௌராஷ்ட்ர விப்ரோத்தமம்
போ3தா4னுக்3ரஹ தி3வ்ய மங்க3ளகரம்
வந்தே3 கு3ரும் ஶாஶ்வதம் ॥

<-<<<->>>->

அனந்தசயனம், உ. வே. ஸ்ரீ பத்மநாபாச்சாரியார் அவர்களால்
செய்யப்பட்ட தனியன்.

श्रीमत्वेंकटसूरि वर्यमनघं सौराष्ट्र विप्रोत्तमम्
श्रीलक्ष्मी नरसिंह दिव्य चरणां भोजैक दत्तान्तरम् ।
सत्साहित्य दुरन्धरं गुरुवरं वेदान्तविद्या मृता
स्वाधास्यक्त सुमानसंहृदिबुधा - ह्लादस्पदं भावये ॥

ஸ்ரீமத்3 வேங்கடஸூரி வர்யமனக4ம்
ஸௌராஷ்ட்ர விப்ரோத்தமம்
ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹ திவ்ய சரணம்
போ4ஜைக த3த்தாந்தரம் ।
ஸத்ஸாஹித்ய து3ரந்த4ரம் கு3ருவரம்
வேதா3ந்த வித்3யாம்ருதா
ஸ்வாதா4ஸ்யக்த ஸுமான ஸம்ஹ்ருதி3பு3தா4
ஹ்லாத3ஸ்பத3ம் பா4வயே ॥

ஸ்ரீமத் வேங்கடஸூரி ஸ்வாமிகளிடம்

ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் உபதேசம் பெறல்.

ௐ

ஸ்ரீரஸ்து

# பதிப்புரை

கடலாடையுடுத்த இம்மாநில மடந்தை முகமாவது பாரத வருஷம். இது **ஆர்யகம், தமிழகம்** என இரு பாகுபாடுடையது. ஆர்யகத்தில் ஸௌராஷ்ட்ர தேஸமுள்ளது. அத்தேஸத்தை சந்த்ர வம்சத்தரசர்கள் அதி சிறப்பாய் ஆண்டு வந்தனர்.

வளங்களனைத்தும் தன்னகத்தடக்கித் திகழும் அத் தேஸத்தில் அறுபத்து நான்கு ரிஷி கோத்திரஸ்தரான கிரி நாராயணப் பிராமணர் எனும் **ஸௌராஷ்ட்ர தேஸஸ்த பிராஹ்மணர்கள்** ஸோமநாத், ராஜகோட், துவாரகை, தௌலதாபாத் (தேவகிரி) முதலிய பட்டணங்களில் ஸர்வஜன பூஜிதர்களாய் முதிர்ந்த வைதீகத்துடனும் ஸகல போக பாக்கியங்களுடனும் சௌக்கியமாய் வாழ்ந்துவருங் காலத்தில்,

அவ்விராஜதானியின் சிறப்பையும், செல்வப் பெருக்கையும் கேள்வியுற்ற அராபி ஜாதியைச் சேர்ந்தவனும், ஹிந்து மதத் துவேஷியும், விக்கிரக நிக்கிரகனெனப் பெயர் பெற்றவனும், யுத்த வெறியனுமான கஜினி மகம்மது என்னும் அரசன் கி. பி. 1024ம் ஷுத்தில் நிகழ்த்திய தன் 12-வது படையெழுச்சியில் ஸோமநாதபுரத்தை முற்றுகையிட்டும், ஸோமநாதர் ஆலயத்தை நாசஞ் செய்தும், வேத பாரகர்களான விப்பிரர்களை ஹிம்சித்தும் பொருள்கள் அனைத்தை

யும் கொள்ளை கொண்டதனால் அத்தீவினைக்கு அக்கிரகார வாசிகள் மனம் நொந்து அவனைச் சபித்தனரென்பதும், பிராஹ்மண ஸாபத்தால் நிலைகுலைந்து அவனும் இறந்தானென்பதும் சரித்திரப் பிரசித்தம்.

பிறர் பொருளைக் கொள்ளை கொள்ளும் கொடுங்கோன்மை அம்மட்டில் ஒழியவில்லை. அப்பிராந்தியத்தில் பல பாகங்களிலும் அலாவுதீன் டோக்ளக், தைமூர் முதலியோர் கி. பி. 1300-ம் ௵வரை படையெடுத்து வந்து த$^4$ன தா$^4$ன்யாதி வஸ்துக்களைக் கொள்ளையடித்துக் கொண்டதுடன், மத விஷயங்களிலும் பிரவேசிக்கத் தலைப்பட்டனர். அவ்விடையூறுகளைச் சகிக்கவொண்ணாத ஸௌராஷ்ட்ர விப்ர குலோத்தமர்கள் தங்கள் சிறந்த தேஸத்தையும் ஆஸ்தி பூஸ்திகளையும் துச்சமாகக் கருதித் தெற்கு முகமாகத் திரும்பித் துங்கபத்திரா நதி தீரத்தில் (ஹம்பி) வித்யாரண்ய க்ஷேத்திரமென்று சொல்லப்படுகிற **விஜயநகருக்கு** கி. பி. **1312**-ம்௵த்தில் விஜயம் செய்தார்கள்.

ஜெயஸீலரான விஜயநகரத்து மன்னர், ஜோதிஷ, கணித, வைத்திய சாஸ்திரங்களிலும், காருகத் தொழிலிலும் வல்லோரான இவர்களை அன்புடன் வரவேற்று உபசரித்துத் தம் இராஜதானியிலேயே வாசம் செய்ய வேண்டுமென வேண்டிக்கொண்டு போதிய வசதிகளையும் செய்து கொடுத்தும், மஹாதேஜஸ்விகளான இவ்விப்பிரர்களின் விஜய ஞாபகார்த்தமாக "**ஸௌராஷ்ட்ர விஜயாப்தம்**" எனப் புதியதோர் ஸகாப்தத்தை சாலிவாகன சகம் 1235 (கி. பி. 1312)ம் ௵த்தில் பிறப்பித்துப் பரவச்செய்தும் பக்தி வினயத்துடன் போற்றியும் ஆதரித்தும் வந்தனர்.

* இவர்கள் மனே நிம்மதியாக அவ்விராஜதானியில் இருநூறுண்டுகளுக்குமேல் வாசம் செய்தனர். அங்கும் அத்துருக்கராட்டூழியம் தொடர்ந்தே தாண்டவமாடிற்று. செல்வத்தாலும் அழகிய கட்டிடங்களாலும் சிறந்து விளங்கிய அவ்விஜய நகரத்தை நாஜர்கான் என்பவனும், மாலிக்காபர் என்பவனும் முறையே சூறையிட்டதுடன் அந்நகர மன்னரையும் இரக்கமின்றி கொன்றனர்.

இவ்வாறு மகமதியப் படையெடுப்பென்னும் (சூறுவளி) புயல்காற்றுனது மாறிமாறி வீசி, ஸௌராஷ்ட்ர தேஸஸ்தரை தமிழ்நாட்டிற் குடியேற்றிவிட்டது.

இவர்கள் தமிழகத்திற்குப் பிரவேசித்த பின் இலௌகிக விருத்தியின் பொருட்டுத் தெலுங்குங் கன்னடமும் தமிழும் கற்க நேர்ந்ததினுல் மாத்ரு பாஷையின் பிரகாசம் குன்றும் நிலையடைந்தது.

அதனைப் புனருத்தாரணம் செய்து புராதனச் சிறப்பை யுலகில் நிலைநிறுத்தக் கலி 4919-ம் ஆண்டில் ஸ்ரீ தும்புரு நாரத அம்சத்துடன் ஸாஹித்யமே மனுஷ்ய ரூபமாய் **ஸ்ரீமத் கவி வேங்கடஸூரி** என்னும் மகாநுபாவர் அவதரித்தார்.

ஒளி குன்றிய நமது பாஷையை ஒளி பெறச்செய்தும், தேஸவாஸ ரீதியாய்க் கலப்படைந்திருந்த வாக்கியங்களைக் களைந்தும், அழிவிலாப் பாஷா மார்க்கத்தையும், வாக்கியங்

---

* கி. பி. 1530-ம் ஆண்டிற்குப் பின்புதான் தமிழகமாகிய சேர சோழ பாண்டிய நாடுகளில் குடியேறி யிருக்கவேண்டும்.

களின் வரம்பையும் வியாகரண பூர்வகமாய் ஸப்தாதி தாதுக்களையும் மணிகளாகத் திரட்டியியற்றியருளியவர் நம் கவி ஸ்ரேஷ்டரேயாவர்.

இவருடைய கலைக்கண் நோக்கால் மஹா மேடிகளும், மஹா ராஜாக்களும் வசீகரமாயினர். இவர் காலத்தில் ஸௌராஷ்ட்ர பாஷையை நமது பாடசாலைகளில் போதிக்கச் சர்வ கலாசாலையார் நினைத்திருந்தால் மிகமிகச் சிறந்த உபாத்தியாயராகிய இவர் B. A. வகுப்பு வரை வேண்டிய புஸ்தகங்களைச் சிறிதும் சிரமமின்றி இயற்றிக்கொடுத்திருப்பார்.

உலகில் நிலவும் பல்வேறு பாஷையும் அதனதன் கௌரவத்திலும் சிறப்பிலும் பெருக்கமடைந்து வருவது போல் நம் பாஷையும் தன் தொல்லுயர்வை மீண்டும் அடைய வேண்டாமா? தேனினுமினிய சுவைமிக்க பாஷை நம் பாஷையல்லவா?

ஸம்ஸ்க்ருத அமரத்திற்கு நிகரான அமரம் (நிகண்டு) ஸௌராஷ்ட்ர அமரமல்லாது வேறில்லை என்னும் மேன்மையை நிலைநாட்டிய நமது குருஸ்வாமியை என்னென்று போற்றுவது? என்ன கைம்மாறு செய்வது?

பொருட்சுவை, சொற்சுவை பொலிந்தும் புகழ்பெற்றும், சிந்திக்கிடக்கும் நம் கவி கோளரியின் காவ்யங்களைத் திரட்டிப் பிரசித்தஞ் செய்ய மனமிறங்காத நம்மவரைப்பற்றி என்னென்றுதான் புகழ்வது?

பாஷா கண்ணியத்தைச் சம்பாதித்து விருத்தி செய்வது மாத்ரு கைங்கரியமாகையால் அதற்குள்ள பெருமை வேறு

எக்கைங்கர்யத்திலுமிராது என்பது திண்ணம். லக்ஷாதிபதி, கோடீஸ்வரர், மஹாராஜா, சக்ரவர்த்தி முதலியவர்களுக்குமில்லாத புகழும் புண்ணியமும் பாஷாபிவிர்த்தி செய்யும் மஹான்களுக்கு உண்டு. **'பாஷாபிமானமே சமூக முன்னேற்றத்திற்கு முதற்படி'** ஆகையால் நமது விக்ஞான மூர்த்தியாரால் இயற்றப்பட்டிருக்கும் சகலவித வசனரசன காவ்ய கீர்த்தனங்களனைத்தையும் சேகரித்து அச்சுவாகன மேற்றிப் பிரசித்தி செய்வதே அன்னாருக்கு நாம் இயற்றும் பிரதியுபகாரமாகும்.

இக்கடமையை முதற்கடமையாகக் கொண்டு மனமுவந்து ஈடுபடவேண்டுமாய் மஹாஜனங்களனைவரிடத்தும் எமது விண்ணப்பத்தைச் சமர்ப்பிப்பதுடன்,

இந்நூலுக்கு முகவுரை தந்து சிறப்பித்தவரும், ஸ்ரீ ஸூரி ஸ்வாமிகளின் அன்புமிக்க பக்தரும், இளமையிலேயே சமூகத் தொண்டிலீடுபட்டு 1900ஷு த்தில் உறையூரில் நடைபெற்ற 4-வது மஹாநாட்டின் காரியதரிசியும், 1934-ம் வருஷத்தில் மதுரையில் நடைபெற்ற 8-வது மஹாநாட்டின் அக்கிராசனதிபதியும், சிறந்த நியாயவாதியும் நீதிபதியுமான ரிடையர்டு சப் ஜட்ஜ் **ஸ்ரீஜத் N. ராமஸ்வாமி அய்யர்**, B.A., B.L., அவர்களுக்கும்,

தாய்ப் பாஷையிலுள்ள புராதன கிரந்தங்களைச் சேகரித்து அபிவிருத்தி செய்யும் லக்ஷியத்துடன் 7—11—37-ம் ஷுத்தில் மதுரையில் நடைபெற்ற முதலாவது ஸௌராஷ்ட்ர ஸாஹித்ய ஸம்மேளனத்திற்கு அக்ரகண்யராயிருந்து விமரிசையாய் நடத்தியவரும், சமூகச் சபைகளிலெல்லாம் தலைமை வகித்துச் சேவை செய்து

வருபவரும், ஸௌ. பி. ஸுகுணோதய ஸபா போஷகரும், பாஷாபிமானமும், உயரிய நோக்கமும், தரும சிந்தனையும், பல நூல்களில் தேர்ச்சிமிக்குப் பெருந் தனமுடைய வருமான **ஸ்ரீஜத் K. M. S. லக்ஷ்மணய்யர்** அவர்களுக்கும்,

ஸ்ரீஸூரி ஸ்வாமிகளின் பேரில் **தோத்திரப்பாக்கள்** இயற்றி இந்நூலைச் சிறப்பித்தவரும், 1934-ம்வருஷத்தில் மதுரையில் நடைபெற்ற 8-வது மஹாநாட்டுக் காரியதரிசிகளிலொருவரும், கீதாம்ருதத்தையே பாராயணம் செய்து ஆகாரமாகக் கொள்பவரும், கீதா நிலைய ஸ்தாபகரும், சதுர்பாஷைகளில் கவிகளியற்றுவதில் புலமைமிக்க நல்லாசிரியர் ஸ்ரீஜத் **T. R. பத்மநாபய்யர்** அவர்களுக்கும்,

இந்நூலுக்குச் **சாற்றுப்பா** வெழுதிச் சுந்தரமாக்கியவரும், சுந்தரகீத ஆசிரியரும், இளமையிலேயே துறந்து நைஷ்டிக பிரம்மசர்யத்துடனும், ஸாஹித்ய விற்பன்னத்தில் சிறந்திலங்குபவருமான ஸ்ரீஜத் **ஸ்வாமி சுந்தரபாரதி** யாரவர்களுக்கும்,

**'தாய்ப் பாஷை சிறக்கத் தம்சமூகமும் சிறக்கு'** மென்னு மிலக்ஷியத்தைக் கடைப்பிடித்து இனிய ஸௌராஷ்ட்ர பாஷையில் அழகிய நடையில் நவரசங்களும் ததும்ப நவீன நாடகங்கள் மூலம் சமூகத்திற்கும், பாஷைக்கும் அரிய தொண்டாற்றி மஹாஜனங்களை ரஸிக்கச்செய்தும், சமூகத்தலைவர்களால் பாராட்டப்பெற்றும், பல நற்சாக்ஷிப் பத்திரங்களும், பதக்கங்களும் பெற்று லோகப் பிரசித்தியுடன் விளங்கும் **மதுரை ஸௌ. பி. ஸுகுணோதய சபை போஷகர்**களுக்கும், **ரஸிகர்**களுக்கும் எமது நன்றி என்றும் உரித்தானது.

நம் கவிச் சக்கரவர்த்தியாரியற்றியருளிய ஸ்ரீமத் ஸௌராஷ்ட்ர ஸங்கீத ராமாயணத்தையும், பால ராமாயணத்தையும், ஸ்ரீஸ்வாமிகளின் பிரீதிமிக்க சிஷ்யரும், **மஹீராவண சரித்திர** ஆசிரியருமான ஸ்ரீமத் **கவி கந்தாடை லக்ஷ்மணஸூரி**யவர்களின் ஸகாயத்தைக்கொண்டு ஆந்திர லிபியில் பிரசுரித்திருக்கும் **மதுரை ஸௌராஷ்ட்ர பாஷாபி வர்த்தனி ஸபையின்** உறுப்பினர் பன்னிருவர்க்கும்,

தற்போது பாஷாபிவிர்த்தி விஷயமாய் சிரத்தை கொண்டு உழைத்துவரும் **ஸௌராஷ்ட்ர பாஷா ஆராய்ச்சி சங்க**த்தாருக்கும்,

இப்பாஷை மீது மிகுந்த அபிமானமும் ஆர்வமு முடைய **மகாத்மா காந்தி**யடிகளின் ஆஸ்ரமத்தைச் சேர்ந்தவரும், வார்தா (ரக்ஷாபந்தனம்) வித்யா மண்டல ஆசார்ய ஸ்ரீஜத் **காகா கலேல்கார்ஜி** அவர்களுக்கும்,

ஸமூகப் புராதன நடையுடை பாவனை சம்பந்தமாயும், பாஷா சம்பந்தமாயும், சரித்திர சம்பந்தமாயுமுள்ள ஸகல விஷயங்களையும் சேகரித்துப் பாதுகாத்து வருவதற்கோர் **"அபூர்வ வஸ்து ஸேகர நிலயம்"** என்னும் மியூஸியத்தை ஸ்தாபிக்க முயற்சி எடுத்துக்கொண்டவரும், பல துறைகளிலும் சமூக சேவை செய்து வருபவரும், மதுரையில் நடைபெற்ற 8-வது மஹாநாட்டின் காரியதரிசிகளிலொருவரும், **மதுரை ஸௌராஷ்ட்ர ஸபை** கௌரவ காரியதரிசியுமான ஸ்ரீஜத் **P. S. A. கிருஷ்ணய்யர்** அவர்களுக்கும்,

**ஸ்ரீமந் நடனகோபால நாயகி ஸ்வாமிகள்** திருவாய் மலர்ந்தருளிய கீர்த்தனைப் புஸ்தகப் பதிப்பாசிரியரும்,

ஸ்ரீஸ்வாமிகளின் ஆலயத் திருப்பணியாளரும், பாஷாபிமானியுமான ஸ்ரீஜத் **C. M. V. கிருஷ்ணமாச்சாரியார்** அவர்களுக்கும்,

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனை வர்ணமெட்டுக்களில் ஸ்ரீஸ்வாமி சுந்தர பாரதியவர்கள் ஸ்வபாஷையிலியற்றிய "**சுந்தர கீதம்**" என்னும் புஸ்தகத்தைப் பிரசுரம் செய்த பாஷாபிமான சீலர் ஸ்ரீஜத் **P. A. B. குப்புஸ்வாமி அய்யர்** அவர்களுக்கும்,

ஸ்ரீஜயதேவ ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதத்தில் அருளிய **கீதகோவிந்த**மென்னும் அஷ்டபதிக்கு நேராக **ஸ்ரீகுருகாதி ரங்கதாம ஸ்வாமிகள்** ஸௌராஷ்ட்ர பாஷையில் அருளிய "**அஷ்டபதியை**" தமிழ் எழுத்தில் உச்சரிப்பு சமிக்ஞையுடன் அச்சியற்றச் சிரமம் எடுத்துக்கொண்ட கும்பகோணம் ஸ்ரீஜத் **பச்சரிசி. ச. வெங்கடாசலபதி பாகவதர்** அவர்களுக்கும் எமது அன்புமிக்க வந்தனத்தைச் செலுத்துகின்றோம்.

இஃது ஸௌராஷ்ட்ர பக்த விஜயத்தின் இரண்டாம் பகுதியாம். முதற்பகுதியாகிய ஸ்ரீமந் நடனகோபால ஸ்வாமி சரித்திரத்தை வரவேற்றதுபோல் இதையும் வரவேற்பீர்களென நம்புகின்றோம். நிற்க, இற்றைக்குச் சுமார் இரண்டரை நூற்றாண்டுகட்கிடையே சமூக உய்விப்புக்கெனப் பல மஹான்கள் தோன்றி எக்காலும் மறக்கமுடியாத அளவு சமூகச் சேவை செய்துள்ளனர். அன்னார் வரலாறுகளும், நிகழ்ச்சிக் குறிப்புகளும், ஸாஹித்தியங்களும் எளிதில் கிடைப்பதற்கில்லை, பெரு முயற்சி

யும், பெருழைப்புங்கொண்டு தேடியும் மிகச் சொற்ப விஷயங்களை சேகரிக்க முடிந்தது. எனினும் எமது சமூக சேவா தாகம் இன்னும் தணியவில்லை. ஆனால் அத்தாகமானது **புராதன விஷய விசாரம்** செய்வதின்மூலம்தான் தணியக்கூடும். அம்மகான்களின்பாலன்பு கொண்டு புரியுமிச் சிறிய சேவைக்குத் திருவருள் புரிந்த எல்லாம் வல்ல **ஸ்ரீபிரஸன்ன வேங்கடேஸ்வரரை** எம் மனமொழி மெய்களால் சிந்தித்து வந்தித்துத் தொழுகின்றோம்.

குற்றமகற்றிக் குணத்தையே கொள்வார் பெரியோர்.

மதுரை,
6—6—41.

கு. வெ. பத்மநாபன்,
ஸௌராஷ்ட்ர விப்ர பந்து.

## உரிமையுரை.

அபீஷ்ட வரங்களைத் தந்தருளும் பிரத்தியக்ஷ தெய்வமான ஸ்ரீபிரஸன்ன வேங்கடேஸ்வர ஸ்வாமி ஆலயத் திருப்பணிகளைப் பிரஸா ஸித்துச் செய்தவரும், ஸ்ரீமத் கவி வேங்கடஸூரி ஸ்வாமிகளின் அன்பரும், பஞ்சாயத்து நியாய ஸ்தாபகருமான எமது தாதா ஸ்ரீஜத் குட்டுவான். வெ. குப்பய்யரன்

அவர்களின் ஸமூகஸேவா ஞாபகார்த்தமாக இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

நூலாசிரியன்.

# ஸ்ரீமத் கவி வேங்கடஸூரி ஸ்வாமிகளின் ஜாதகக் குறிப்பு

கலி 4919-வெகுதான்யஹு புரட்டாசிமீ 7உ ஸோமவாரம்.

மிருகசீரிஷ நக்ஷத்திரத்தில் ஜனனம்.

# ஸ்ரீமத் கவி வேங்கடஸூரி ஸ்வாமி சரித்திரம்

### பிரார்த்தனை ஸ்லோகம்.

* कोङ्कोगरिर्मुदुलो थीन्गळ तीसुकोटि
देवुन्महा ऋषिनुमौनिनु वेकिनस्कि ।
नौभक्ति चल्लनुकि तेङ्कसदातिसोस्मी
चल्लू मोर्हालु होये कोद्दि रमा नृसिंम्हूक् ॥

கோங்கோ க3ரிர் முது3லோ தீ2ன்க3ள தீஸூகோடி
தே3வுன்மஹா ரிஷினு மௌனினு வேகிநஸ்கி ।
நௌப4க்தி சல்லனுகி தேங்கோ ஸதா3 திஸோஸ்மீ
சல்லூ மோர்ஹாலு ஹோயேகோத்3தி3 ரமாந்ருஸிம்ஹூக் ॥

* (இஃது ஸ்ரீஸூரி ஸ்வாமிகள் இயற்றிய பாலராமாயணத்திலுள்ள முதல் ஸ்லோகமாகும்)

## அவதாரம்

குடக மலையின் மகளெனப்படும் காவிரியாற்றால் வளம் பெருகித் திகழும் சோழமண்டலத்திலே அய்யம் பேட்டை(க்குச்சமீபம்) இராமச்சந்திரபுரமென்னும் ஊரில் ஸௌராஷ்ட்ர தேஸஸ்த விப்ர குலத்தில் மதங்க ரிஷி கோத்திரத்தில், க்ரணுவான் என்னும் ஸாகையில், மஹா வித்வ சிரோமணியாயும், புரோஹிதத்தில் நிபுணராயும் விளங்கிய **ஸ்ரீ நாராயண ஸர்மா**வுக்கும், ஸ்ரீமதி **ரெங்க நாயகி தேவி**க்கும் அருந்தவப் புதல்வராய் கலி 4919-க்கு ஸௌராஷ்ட்ர விஜயாப்தம் 505, பஹுதான்ய (1817)௵ புரட்டாசி௴ 7௳ ஸோமவாரம் மிருகசீரிஷ நக்ஷத்திரத்தில் ஸ்ரீஸ்வாமிகள் அவதாரமானார்.

பெற்றோர் இவருக்கு "**வேங்கட சுப்பு**" என நாமகரணஞ் செய்து, அத்யந்தப் பிரீதியுடன் வளர்த்து, அன்னப்ராஸனம்; சௌளம்; வித்யாப்யாசம்; உபநயனம்; உபாகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களைக் கிரமமாய் முடித்து வைத்தனர். இவர் பெற்றோர் மனம் பூரிக்க உத்தமமான தர்ம கார்யங்களை அனுஷ்டித்து வந்தார்.

## வாலிபமும், வித்யாப்யாசமும்

**"வித்$^3$யஹால் மனஸித்$^3$தி$^3$ ஸாத$^3$ஞே-**
**வித்$^3$யஹால் ஹரி ஸேவிதோ."**

என்பதை இவர் உணர்ந்து ஓர் நல்லாசிரியரை ஆஸ்ரயித்து வித்யாப்யாசம் பெற்று முறையே சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜோதிஷம் என்னும்

ஆறு சாஸ்திரங்களையும், வேத ஸம்ஹிதைகளையும் ஸ்வரத்துடன் அநுஸந்தானம் பண்ணி சதுர்வேத பண்டிதரானார்.

நாடகக் கலை பயில்வதிலும் மிகச் சிரத்தையுடையவராய்ப் பால்யத்திலிருந்தே **"காவ்யா த³ர்ஸம்"** என்னும் அலங்கார சாஸ்திரத்தையும், **"பரத சாஸ்திரம்"** முதலிய நாடக காவ்யங்களையும் ஓதித்தேர்ந்தார். நாடகங்கள் பார்ப்பதிலும் இவருக்கு மிகப்பிரியம். சாஸ்திர வித்தைகளைக் கற்றுக்கொண்டே, சஸ்திர வித்தையையும் கற்றுத் திடதேகத்துடன் ஆரோக்யமாயிருந்தார்.

## பிரம்மசர்யமும் பக்தியும்

இவர் பிரம்மசர்ய விரதம் பூண்டு, வாய்மை, நேர்மை, நீதி, பூததயை ஆகியவை நிரம்பப் பெற்றவராய்,

**நிதி செலவாம், கெடுநீசர் வௌவுவர்;**
**மதியினை மயக்கும்; வெம்மறம் விளைத்திடும்;**
**கோதி நரகுய்த்திடும்; குணமும் கல்வியும்**
**விதிதரும்; பதிதரும்; வீடும் நல்குமே.**

என்ற நீதி நூலின்படி பணத்தேட்டத்தில் பற்றற்றவராய்ப் பரோபகார சிந்தையுடன் அல்லும் பகலும் கல்விப் பயிற்சியிற் கண்ணுங் கருத்துமாய்ப் பல்கலைகளிலும் பாண்டித்யம் பெற்று * **மஹான் ஸ்ரீ தூபதீர்த்தார்ய ஸ்வாமி**களின் திருவடியை ஆஸ்ரயித்து பக்தியிலும் விரக்தியிலும் சிறந்து, நித்திய நைமித்திய கருமங்களை ஆஹ்நிக விதிப்படி

---

* **தூப தீர்த்தார்யர்:—** இம்மஹான் ஓர் வரகவி. இவர் சிரஸிற் சிவப்புக் குல்லாய் காது மறைய அணிந்தும், திருமேனியிற்

(இதன் தொடர் அடுத்த பக்கம்.)

யனுஷ்டித்து, பகவானிடத்து விசேஷ மனதைச் செலுத்தினவராகி சாக்ஷாத் **ஸ்ரீலக்ஷ்மீ நரசிம்ம மூர்த்தி**யின் அநுக்கிரஹத்தையும், சித்தியையும் பெற்றுக் கவிபாடுந் திறனையும் அடைந்து ஜன ஸமுதாயத்திற்குப் புண்ணியம் லபிக்குமாறு புரோஹித விருத்தியைக் கைக்கொண்டு *யாஜியாகி, அருங்கண்ணியராய்ச் சென்றவிடமெங்கணும் அக்ர தாம்பூலம் பெற்றுவந்தார்.

---

**தூப தீர்த்தார்யர்:- (தொடர்)**

துவாதச நாமம் தரித்தும். சாம்பிராணிக்கூட்டைக் கையிலேந்தி ஸ்ரீரங்கநாத ஸ்வாமிக்கு தூப தர்சனமாக்கிக் கொண்டிருந்ததால் "**தூப**" என்றும், தஞ்சையில் வெகுகாலம் மழையின்றி க்ஷாமம் சம்பவித்திருந்தபோது தென்னாட்டு பிராஹ்மணர் அநேகரால் ஜபிக்கப்பட்ட வருண ஜபத்திற்கும், யாகத்திற்கும் மழை பெய்யாமையால் இராஜதண்டனைக்குப் பயந்த அப்பிராஹ்மணர் அபயமென இவரைச் சரண்புக, அன்னாரின் பயமொழியத் தேற்றித் தமது யோக ஸக்தியால் ஓர் கீர்த்தனை பாடி மழை பெய்யச் செய்து சுபிக்ஷமுண்டாக்கியவராதலால் "**தீர்த்தார்யர்**" என்றும் அறிஞரால் திருநாமம் சூட்டப்பட்டுள்ளது.

இவரைப் பற்றிய மஹத்தான விஷயங்கள் பல உண்டு. அவைகளில் இரண்டொரு விஷயங்கள் இங்கு குறிப்பிடுவோம்:-

கோவில்களை எல்லாம் இடித்துப் பள்ளிவாசலாக்கிவரும் துருக்க மன்னன், திருவரங்கம் பெரிய கோவிலையும் அழித்து விடாதமுன் ஸ்ரீரங்கநாதரைத் துயிலெழ எச்சரிக்கை செய்தும் தமதுசக்தியால் அத்துருக்கனை அங்கு வரவொட்டாமல் தடுத்தும் கோவிலைக் காப்பாற்றிய மஹான் இவரே.

பாட்டு:— "தோ²டு போ²டுதொ நீ:ஸ்தக் ஹூடி ரெங்கா"

............ என்பதாம்.

---

* யாஜி = யாகங்கள் பண்ணிவைக்கின்றவர்.

## இல்லறமும் இனிய வாழ்வும்

மனையறத்தை மாண்புடன் நடத்தத் தமது 21-ம் பிராயத்தில் ஸ்ரீமதி **லக்ஷ்மீ தேவி** எனும் தூயகுண ஸீலவதியை மணந்து, மலரும் மணமும், அமிர்தமும் இனிமையும் போன்று ஒத்த மனத்துடன் துவைத மதாஸ்ரயராய், அன்பும் அருளும் உடையவராய், உபசார வார்த்தைகளுடன் விருந்தினரை (பொ²வ்ஞனுகு) யும், உத்தமத் துறவிகளையும் ஆதரித்துக் கிருகதர்மத்தைச் செவ்வையாய் நடத்திக்கொண்டு சுமார் 6-வருஷ காலம் பரமக்குடியிலே வாசம் செய்து வந்தார்.

---

**தூப தீர்த்தார்யர்:- (தொடர்)**

ஸ்ரீரங்கம் கோவில் கதவுகள் மூடப்பட்டிருந்தபோது கதவுகள் திறக்கப்பட "மொரஹோரு" —என்னும் கீர்த்தனை பாடக் கதவுகள் திறக்கப்பட்டு சுவாமியை தரிசித்தவரும் இவரே.

மற்றோர் நாளில் திருப்பதி கோவிலில் திரைச்சீலை தீப்பற்றிக்கொள்ள, காவேரி தீர்த்தத்திலிருந்து அத்தீயை அமர்த்தியதும் இம்மஹானேயாம்.

திருவரங்கம் பெரிய கோயிலில் இன்றளவும் முதல் தீர்த்தப் பிரசாத மரியாதைகள் இவருடைய நாமதேயத்திற்கேயாம்.

இவர் இயற்றியருளிய கீர்த்தனைகளுக்கு **"வைத்யநாத்"** என்ற முத்திரை வைத்துப் பாடப்பட்டுள்ளது.

இவர் சரித்திரம் **ஸெளராஷ்ட்ர** பக்த விஜயம் முதற்பகுதிக் குறிப்பில் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

இம்**மஹானின்** திவ்விய சரித்திரம் ஸ்ரீமத் கவி வேங்**கட** ஸூரி ஸ்வாமிகளால் **எழுதப்பட்டிருப்பதாகச்** சில **பெரியோர்**களால் **சொல்லப்படுகிறது.** (உதங்க கோத்திரம்)

## ஆசார்யமும் ஆசுகவியும்

இவர் பரமக்குடியினின்று தஞ்சை நகர் சென்று, நன்னூலிற் சொல்லியபடி ஆசிரியரிலக்கணம் நிரம்பப் பெற்றவராகி ஓர் பாடசாலைக்கு உபாத்தியாயராயமர்ந்து வித்யார்த்திகளுக்கு ஸம்ஸ்கிருதம், ஸௌராஷ்ட்ரம், ஆந்திரம், திராவிடம் ஆகிய பாஷைகளைக் கற்பித்துக் கொண்டும், வைதிக நெறியில் பௌரோஹிதத்தையும் விடாது மேற்கொண்டும் வரலானார்.

ஆசிரியரானபின் மனோவமைதி மிக்கவராகிச் சந்தர்ப்பத்திற்கேற்ற சந்தங்கள் பாடுவதிலும், காவ்யங்கள் எழுதுவதிலும் சிறந்து, வித்யார்த்திகளுக்கு லாவணிகளையும், பத்யங்களையும் பாடம் சொல்லி வந்தார்.

அப்போது சமூகத் தொண்டில் சிரத்தை மிக்க ஸ்ரீ சம்பங்கி லட்சுமண பாகவதரும், ஸ்ரீ வந்தவாசி நாராயணஸ்வாமி பாகவதரும் கவீஸ்வரரை அபிமானத்துடன் ஆதரித்தனர். அவ்வூர் மஹாஜனங்கள் குருஸ்வாமிகளைப் பல்லக்கிலெழுந்தருளச் செய்து பக்தி வினயத்துடனும், ஆரவாரத்துடனும் ஊர்வலம் வந்து குரு கடாக்ஷத்தைப் பூரணமாகப் பெற்றனர்.

சிலகாலம் ஸ்ரீ ஸ்வாமிகள் தஞ்சை ஸௌராஷ்ட்ர அக்கிரகாரத்திலுள்ள ஹனுமார் கோவிலுக்கு அர்ச்சகராகி அவ்வாலயத் திருப்பணிகளைச் செய்து வந்தார். இப்பொழுது அத்திருப்பணி ஓர் மஹாராஷ்ட்ர மார்த்துவரைக் கொண்டு நடத்தப்பட்டு வருகிறது.

## சிவாஜி மன்னரின் திருமுகம்

தஞ்சை மஹாராஷ்ட்ர மன்னர்கள் தங்கள் ஆட்சியின் பெருமை சாஸ்வதமாய் நிலைத்திருப்பதற்கு "ஸர்வ கலா வித்வத் பரிஷத்"தையும், ஸாஸ்வதி மஹாலையும் சிரேஷ்டமாய் பரிபாலித்து வந்தார்கள்.

அதுபோல் ராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட விஜய ப்ரதாப **ஸ்ரீ சிவாஜி மஹாராஜா** அவர்களும் சகல கலைகளிலும் பாண்டித்யமுடையவராதலால் மேற்கூறிய இரு கழகங்களையும் முன்னவர்களைவிட அதி சிறப்பாய் நடத்தி வந்தார். சிறந்த வித்வான்களைத் தேர்ந்தெடுப்பதே அக்கழகத்தாரின் முக்கிய நோக்கம். அவர்கள் கவிதார்க்கிக ஸிம்ஹமாய் விளங்கிய நமது கவிரத்னத்தின் பாண்டித்யத்தையறிந்து மஹாராஜரிடம் தெரிவிக்கவே, அரச சபையிலிருந்து அழைப்புத் திருமுகம் வந்தது. அத்திருமுகத்தைப் பெற்று இவர் அரண்மனைக்கு விஜயம் செய்தார்.

மன்னர் இவரை வரவேற்று உபசரித்து உயராசனத்தில் அமரும்படி வேண்ட, இவர் மன்னரை வாழ்த்தி ஆசனத்திலமர்ந்தார். கவியரசரும், புவியரசரும் சல்லாபமாகப்பேசி வித்யானந்த சாகரத்தில் ஆழ்வாராயினர்.

பின்பு தமது புலமையையும் தாம் ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் ஆகிய கவி வகைகளைப் பாடவல்ல

---

ஆசு = க்ஷணத்தில் பாடக்கூடிய கவி.

மதுரம் = இனிமையான கவி.

சித்திரம் = சித்திரித்துக் கூறும் கவி. (அதிசயக்கவி)

விஸ்தாரம் = விரிவான விஷயங்களைக் கொண்டகவி.

பாண்டித்திய முடையவரென்பதையும் தெற்றென விளக்கினார்.

மஹாராஜா அதிக சந்தோஷமடைந்து நமது கவீஸ்வராருக்கு * வீரகண்டாமணி ஹாரத்தையும், விருதுகளையும், ஸூரி என்ற பட்டத்தையும், வித்வத் சம்பாவனையையும் கொடுத்துப் பூசித்தார். அன்றுமுதல் இவர் "வேங்கட ஸூரி" என்ற நாமத்துடன் விளங்கினார்.

## மணமக்களுக்கு மங்களாஷ்டக வாழ்த்து

மஹாராஜா இவரை ஸங்கீத மஹாலுக்கு அழைத்துச் சென்று இவருடைய கவி கிருதங்களிற் சிலவற்றைப் பாடக்கேட்டு மீண்டும் ரஸிகரானார்.

ஏனைய ஆஸ்தான பண்டிதர்களும் இவருடைய ஞானப் பிரகாச கர்ணாமிர்த பாடல்களைக் கேட்டு ஆனந்தமும் அதிசயமும் அடைந்தனர்.

பின்பு மஹாராஜா தம் புத்திரியின் திருமண வைபவத்தின்போது சுவைமிகும் ஸௌராஷ்ட்ர பாஷையில் மங்கள வாழ்த்துப் பாடும்படி நம் பண்டிதரை வேண்டிக் கொள்ள, தக்ஷணமே மன்னர் விருப்பத்திற்கிசைய ஸௌராஷ்ட்ர பாஷையில் § **மங்களாஷ்டகம்** பாடி வதூவரரை ஆசீர்வதித்தார்.

---

* அக்காலத்தில் தஞ்சை கல்யாண மாப்பிள்ளைகள் ஸ்ரீஸ்வாமிகளின் ராஜ ஸன்மான பூஷணங்களை அணிந்துக் கொள்ளும் பாக்கியத்தைப் பெற்றிருந்தனர்.

§ மங்களாஷ்டக ஸ்லோகங்கள் பதின்மூன்று. பிரதி, மதுரை, ஸௌராஷ்ட்ர ஸபை மியூஸியத்தில் காண்க.

# திருமண மங்களவாழ்த்து

*रेत्तन्कङ्कणुभान्दिलिकुनु येदुनौरीक्बिसळ्ळिकुनु
म्हद्दीतीतरधेल्लिविप्रुनुसभां वेदुन्मेन्यासितेनु ।
सोम्पूरूपुगनौरोभन्देसि तेको बोट्टुखडेतेफलं,
ऐवेळ्सोन्तोसुहोरुदंपतिनुकु देन्दोक्सदामङ्गळुन् ॥

రెత్తన్ కంకణు భన్దిలికును యెదునౌరీక్బిసళ్ళికును
మఃద్దీతీతెరధెల్లి విప్రునుసభాం వేదున్ మెన్యాసితెను ।
సొంపూరూపుగ నౌరొభన్దెసి తెకొ బొట్టుఖడెతేఫలం,
ఏవేళ్సొన్తొసుహోరు దంపతినుకు దేన్దొక్సదామంగళున్ ॥

ரெத்தன்கங்கணு ப4ந்தி3லிகுணு
யெது3ர்நௌரீக்பி3ஸள்ளிகுணு
ம:த்3தி3 தீதெரதெ4ல்லி விப்ருணுஸபா4ம்
வேது3ன்மென்யாஸிதெணு ।
ஸொம்பூருபுக்3 நௌரொப4ந்தெ3ஸி தெகொ
பொ3ட்டுக2டெ3தேப2லம்,
எவேள்ஸொந்தொஸாஹோரு த3ம்பதிணுகு
தே3ந்தொ3க்ஸதா3மங்க3ளுன் ॥

* இஃது மங்களாஷ்டக வாழ்த்து ஸ்லோகங்களில் ஒன்று.

அவ்வாசீர்வசன கவி விசேஷத்தை மன்னர் வித்வான்களிடம் காண்பிக்க, அவர்கள் பார்த்து அப்பாஷையின் அமைப்பையும், அழகையும், கம்பீரத்தையும், ஸம்ஸ்க்ருத ஜன்யமான பதப்பிரயோகத்தையும் விமர்ஸனம் செய்து பார்த்து இவ்வளவு ஜீவகலை பொருந்திய கவிதை க்ஷணத்தில் பாட சாமான்ய வித்வான்களாலியலாதென்றும், இவர் ஓர் வரப்பிரசாதியாகவே யிருக்கவேண்டுமென்றும், மஹாராஜா அவர்களிடம் தெரிவித்தார்கள். மன்னரும் அதிக ஆர்வத்துடன் தம் தாய்ப்பாஷையாகிய மஹாராஷ்ட்ர பாஷைக்கும், ஸௌராஷ்ட்ர பாஷைக்குமுள்ள நெருங்கிய சம்பந்தத்தையும், சாதுர்யமான கவிப்பிரவீணத்தையும் அறிந்து அகமகிழ்ந்து இவரை ஆஸ்தான வித்வானாக ஏற்றுக்கொண்டு, ஸரஸ்வதி மஹாலின் ஆராய்ச்சிக்கழகத்து உறுப்பினராக்கி இராஜோபசார ஸன்மான மான்யங்களாதி கொடுத்துப் பேணி வந்தார்.

மெய் வருந்த வித்தை கற்று மேதாவியாகித் தாய்ப் பாஷைக்கு உண்மைத் தொண்டாற்றித் தாம் அடைந்த ராஜோபசார கண்ணியமனைத்தையும் தமது பாஷைக்கும் சமூகத்திற்கும் சுதந்திரமாக்கினவர் இம்மகா புருஷரே!

இவருடைய பிரத்தியக்ஷ உபாசன மூர்த்தியான ஸ்ரீலக்ஷ்மீ நரசிம்மஸ்வாமியின் பூரண அனுக்கிரக ஸக்தியால், பல்லாயிர மக்களுக்கு கிரகதோஷ பரிகாரமும், ஆதங்கநிக்கிரஹமும், விஷக்கடி நிவாரணமும் செய்து பரோபகாரியாயிருந்தார்.

சுமார் இருபத்தைந்து வருஷகாலம் அங்கு வசித்து வந்ததால் ஸ்வாமிகளை **"தஞ்சாவூருஜயான்"** என்றும் சொல்லுவார்கள். ஸ்வாமிகள் அருட் பிரவாகத்தால் மெய் மறந்து கீர்த்தனைகளைப் பாடிவிடுவார். சில சமயங்களில் அவை ஞாபகத்தில் நிற்பதில்லை. ஸ்வாமிகளின் ஏக புத்திரியான ஸ்ரீமதி **சீதையம்மாள்** ஸங்கீத ஞானமும், ஏகாக்ரஹ சித்தமும் படைத்த உத்தமி. தம் பிதா பாடிய யாவும் கேட்ட நிமிஷத்திலேயே போட்டோ பதிவாவது போல் அவ்வம்மையாரின் மனதில் பதிந்து மனனமாகி விடுமாம். அவை அவ்வம்மையாரிடம் பாடக் கேட்டுப் பின்பு ஏட்டில் எழுதிக்கொள்வாராம். அஃது மகள் தந்தைக்குச் செய்த பேருபகாரமாயிருந்தது.

அவ்வம்மையாரிடம் ஸ்வாமிகளின் கிருதிகளைப் பாடங் கேட்டுக் கற்றுத்தேர்ந்தோர் பலர்.

## மதுரை விஜயத்தின் மாண்பு

மங்கலப் பாண்டிவள நாட்டின் முகமெனும் மதுரையம்பதிக்கு நம் கவி கோளரி விஜயமானார்.

இவர் விஜயத்தை யபேக்ஷித்திருந்த மதுரை மஹாஜனங்கள் அதிக ஆவலாய் எதிர்சேவையுடனழைத்து வந்து உபசரித்தனர்.

பின்பு பாஷா ஞானமுடைய பல அபிமானிகளின் முயற்சியால் மதுரை தெற்கு மாசிவீதி **"ஜாட்டிக்குடுவான்"** கூட்டத்தாரின் ஸ்ரீ திரௌபதையம்மன் கோவில் கட்டிடத்

தில் ஓர் ஸௌராஷ்ட்ர பாடசாலையை ஆரம்பித்து அப் பாடசாலைக்கு ஆசிரியராகி மாணவ மாணவிகளுக்கு வைதிக நெறியில் ஸ்வபாஷா ஞானக்கண்ணைக் கொடுத்துப் பெருமையெனு மணிகலனையடைந்து வருவாராயினர்.

## இராமாயணம் இயற்றியது

இவ்வாறு நாட்கள் பல செல்ல, அப்போது இவருடைய கவித்திறத்தை யறிந்தவரும், சிறந்த பாஷா ஞானியுமான ஜமதக்னி கோத்திரத்திலுதித்த * **ஸ்ரேஸ்டின் வேங்கடாசல ஆர்யர்**. நம் கவி ஸ்ரேஷ்டரிடம் சென்று

---

* கவிச்சக்கரவர்த்தி கம்பரை ஆதரித்த திருவெண்ணெய் நல்லூர், சடையப்ப முதலியாரின் புகழைப்போன்றும், அருட்கவி ஸ்ரீ அருணாசலக் கவிராயரை ஆதரித்த மணலி, ஸ்ரீ முத்துக் கிருஷ்ண முதலியாரின் பெருமையைப்போன்றும், நமது கவி அரசரை யாதரித்துப் பூஜித்த **ஸ்ரேஸ்டின் ஸ்ரீ வேங்கடாசல ஆர்யர்** அழியாப்புகழைச் சம்பாதித்தார். இவருடைய புகழும் ஸ்ரீஸ்வாமிகளின் கீர்த்தியும், கிருதிகளும் ஆசந்த்ர தாரகம் தழைத்தோங்கும்.

ஷை வேங்கடாசல ஆர்யரின் பௌத்திரர்களும், ஸ்ரீ கோவிந்தார்யரின் புத்திரர்களுமான ஸ்ரீ ராதாகிருஷ்ணய்யர், ஸ்ரீ நன்னு ஸ்வாமி அய்யர் அவர்களும், பிரபௌத்திரர்களும் மதுரை ஜடாமுனி கோவில் தெருவில் ஸ்ரீஸூரி ஸ்வாமிகளின் ஆசீர்வாத விசேஷத்தால் ஸர்வாபீஷ்ட ஸித்தி பெற்று ஸ்ரீலக்ஷ்மீ புத்திரர்களாய் ஸத்ஸந்தான விருத்தியுடன் வாழ்ந்து வருகின்றனர். அவர்களும் ஸ்வபாஷாபிவிர்த்தி விஷயத்திலும், வித்தியா விஷயத்திலும் தாராள நோக்கமுடையவர்களாகவே இருக்கிறார்கள்.

(இதன் தொடர் அடுத்த பக்கம்)

தாய்ப் பாஷையில் ஸ்ரீமத் ராமாயணத்தை நாடக ரூபமாக இயற்றியருளும்படி வேண்டிக்கொள்ள அவ்வேண்டு கோளுக்கிசைந்து, ஸ்ரீ அருணாசலக் கவிராயரின் தமிழ் இராமாயணத்தில் அமைக்கப்பட்டிருக்கும் வர்ணமெட்டுக் களின்படியே **"ஸ்ரீமத் ஸௌராஷ்ட்ர ஸங்கீத ராமாயணம்"** என்ற பெயருடன் இராமாயணத்தை இனிமையாக இயற்றி முடித்தார். அதில் ஹிந்தி, மஹாராஷ்ட்ர பாஷைப் பதங் களும் அங்காங்கு பிரயோகிக்கப்பட்டிருப்பதால் அப் பாஷைகளிலுமிவர் விற்பன்னமுடையவரென விளங்கு கிறது.

---

**(விபீஷணர் சரணாகதியில் - ஸ்ரீராமரிடம் ஹனுமார் தெரிவிப்பது.)**

**तेनावेहालं - म्रोकरेनु कूलुहोय्**
**न्हास्तो महानि - ष्कळि कोनुकोमेनेत् ।**
**जंदग्निगोत्रो - द्भवुवेंकटाचलोक्**
**गुणुन्सोकोनि - श्चलगुण्मेनीव चेस् ॥**

**தேநாவேஹால் அம்ரோகரேனு கூலுஹோய்,**
**நா:ஸ்தோ மஹா நிஷ்களிகோனுகோ மேனேத்,**
**ஜம்த$^3$க்$^3$னி கோ$^3$த்ரோத்ப$^4$வு வேங்கடாசலோக்,**
**கு$^3$ணுன் ஸோகோ நிஸ்சல கு$^3$ண்மேனீ வசேஸ் ॥**

(யுத்த காண்டம் 12-வது ஸ்லோகம்)

"நிஷ்களங்கனை அவ் விபீஷணனுடைய குணமானது ஜமதக்னி கோத்திரத்திலுதித்த **வேங்கடாசல ஆர்யரின்** குணத் தைப்போன்று நிச்சலமுடையது"—என நமது கவியரசர் இவ ருடைய குண விசேஷத்தை ஷை ஸ்லோகத்தில் விளக்குகிறார்.

## இராமாயண அரங்கேற்றம்

தாம் இயற்றி முடித்த இராமாயண மஹா காவ்யத்தைப் பெரியோர்க்குக் காட்டி அன்னாரின் சிறப்புரையையும், அங்கீகாரத்தையும் பெறவிரும்பி, வித்வான்களும் மஹா ஜனங்களும் நிறைந்த ஸாஹித்ய பரிஷத் என்னுமோர் மஹா ஸபையில், திருவரங்கரையும், ஸ்ரீலக்ஷ்மீ நரசிம்ம மூர்த்தியையும், ஸ்ரீபிரஸன்ன வேங்கடேஸ்வரரையும் ஆவாஹனம் செய்து கிரந்தகர்த்தா தமது இராமாயணத்தை முழுதும் பாடி அரங்கேற்றினார்.

அம்மஹா காவ்யத்தின் அருமை பெருமையை யறிந்து இன்சுவை யனுபவித்த பாஷா விற்பன்னர்களும், பண்டித சிகாமணிகளும் கரகோஷம் செய்து, ஆசிரியரை சமூகச் சிரோமணி எனவும், சிரபூஷணமெனவும் பலவிதமாகப் புகழ்ந்துபேசி அங்கீகிருதம்செய்து புஷ்பஹாரம் சூட்டினர். பிரபுக்கள் கனகாபிஷேகம் செய்தனர். மஹாஜன ஸபையார் கனக கங்கணம், பவித்திரம், கர்ணபூஷணம், காஷ்மீர சால்வை முதலியவைகளை வித்வத் பூஷணமாகச் சமர்ப்பித்தனர்.

பின்பு ஆசிரியரை தந்தப் பல்லக்கிலெழுந்தருளச் செய்து வெண்கொற்றக்குடை கவித்து, வெண்சாமரம் வீசி, **காயத்ரீ துவஜமாம் விப்ரத் துவஜத்தைப்** பறக்க

---

**(ஸ்ரீமத் ஸௌராஷ்ட்ர ஸங்கீத ராமாயணத்தில் மொத்தம் 584 ஶ்லோகங்களும், 297 கீர்த்தனைகளும் அடங்கியுள்ளது.)**

விட்டு, விருதுகள் பிடித்து மங்கள வாத்திய முழக்கத்துடன் கரி பரி பரிவார ஸகிதம் வெகு உத்சாகமாகவும் ஒரு முகமாகவும் திரண்டு ஸூரி ஸ்வாமிகு ஜே! ஸூரி ஸ்வாமிகு ஜே!! என்ற ஜெய கோஷத்துடன் ஊர்வலம் செய்து பாஷா குருவாகக் கொண்டாடினர். அறிஞர் பலர் இவரை வர கவி எனவும், மஹா கவி எனவும் போற்றுவாராயினர்.

நமது கவிரத்தினத்தின் கவிகளனைத்தும் ஸ்ரீலக்ஷ்மீ நரசிம்ம மூர்த்தியின் வரப்பிரசாதமாகையால் அவைகள் போற்றற்குரியனவாயும், சிந்தைக்கினிய, செவிக்கினிய, சொல்லுக்கினிய ருசிகரமாயும், * தற்காலத்துக் கவிகளைப் போலல்லாது நீடூழி நிலைத்திருப்பனவாயு மிருக்கின்றன.

வித்வான்களைப் போஷித்துப் பூஜிப்பதில் சிரத்தை மிக்க மதுரை மஹாஜனங்கள் வித்யா விஸாரதராகிய ஸ்ரீஸூரி ஸ்வாமிகளையும் சிரத்தையுடன் பேணி குரு கடாக்ஷத்தைப் பெற்றனர். ஸ்ரீஸ்வாமிகள் மதுரையில் மிகு சந்தோஷத்துடன் சுகவாசியாய்ச் சிலகாலமிருந்து பின்பு,

---

* **தற்கால கவிகள்:—** தற்காலத்தில் சமயோஜிதமாய் மணிப்பிரவாளமாகவும், கதம்பமாகவும், மிஸ்ரமான பதங்களுடன் (பாட்டுக்கள்) கவிகள் வெளிவரினும் அவை சின்னாட்களில் மங்கி விடுகின்றன. அதற்குக் காரணம் தற்காலக் கவிராயர்கள் கவியியற்றுவதற்கனுகுணமாயுள்ள நம் பாஷா நூல்களைப் பயிலாமையும், முற்காலத்துக் கவிச்சிரேஷ்டர்களைப் பின்பற்றாமையும், இலக்கணவமைதியின்மையுமேயாம்.

## * மத்யராஜபுரிக்கு பத்யகேஸரி விஜயம்

மதுரையை விட்டுத் திண்டுக்கல், திருச்சி, தஞ்சாவூர், அய்யம்பேட்டை, சேலம், வாலாஜாநகர் முதலிய ஊர்களுக்குச்சென்று, சென்றவிடங்களிலெல்லாம் சிறப்பெய்தி, திருப்பதி முதலிய திவ்ய க்ஷேத்திரங்களைத் தரிசித்து, மத்யராஜபுரி (சென்னை)யை அடைந்தார். பட்டணவாசிகளும், பட்டணப் பாக்கங்களிலுள்ளோரும் ஸ்வாமிகளுடைய இருப்பிடத்திற்குப் போய்த்தரிசித்தனர். அப்போது ஸ்வாமிகளுக்கு வயது அறுபது பூர்த்தியானது. **பத்யகேஸரி**யின் ஷஷ்டியப்த பூர்த்தி விழாவை அங்கு விசேஷமாகக் கொண்டாடிக் குரு காணிக்கையாகத் தனதான்ய வஸ்திர பூஷணங்களாதி கொடுத்து உபசரித்து ஆசி பெற்றனர்.

## கும்பகோணத்தில் குருபீடம்

சமூகாபிவிர்த்தியில் தொன்மையாகச் சிரத்தையுடையவர்கள் குடந்தைவாசிகளேயாம். அவர்கள் ஸௌராஷ்ட்ர தர்ம பரிபாலன ஸபையையும் அதிக மூல தனத்துடன் கூடிய மூன்று பெரிய தேவஸ்தான கைங்கர்யங்களையும் மேன்மையாக நடத்தி வருகின்றனர்.

அம்மஹா ஸபையாரின் பிரார்த்தனைக் கிசைந்து ஸ்ரீஸ்வாமிகள் ஞான முத்திரையுடனங்கெழுந்தருளி, குருபீடம் வகித்து அநேக சிஷ்யர்களுக்கு பஞ்ச ஸம்ஸ்கார

---

* மத்ராஸ் (MADRAS) என்னுஞ்சொல், மத்ய ராஜபுரி என்பதன் சிதைவு.

முத்ராதாரணங்கள் செய்தும், திருமந்திரத்தை யுபதேசித்தும், ஆஸ்ருத ஜனங்களுக்கு மோக்ஷம் லபிக்குமாறு செய்தும், ஆசார சீர்திருத்த அக்ரகண்ணியராயும் விளங்கினர். அவ்வூரில் பிரபலப்பிரமுகர்களாயிருந்த * ஸ்ரீஜத் **அரண்மனை கிருஷ்ண பாகவதர்** அவர்களும், ஸ்ரீஜத் **அரண்மனை ரெங்கஸ்வாமி அய்யர்** அவர்களும் ஸ்ரீஸ்வாமிகளின் சிஷ்யர்களாகி குருபக்தி மிகுந்து விளங்கினர்கள். அன்றியும் § ஸ்ரீஜத் **ஜில்லடி. வெ. பத்ருசாமி அய்யர்** அவர்களும் ஸ்ரீஸ்வாமிகளின் சிஷ்ய கோடிகளில் ஒருவராம்.

பின்பு ஸ்ரீஸ்வாமிகள் சின்னட்களங்கிருந்து சாதுர்மாஸ விரதங்களாதி நேமங்களை முடித்துக்கொண்டு திவ்ய தேஸ யாத்திரையாக திக்விஜயம் செய்யலானர்.

---

* ஸ்ரீஜத் அரண்மனை கிருஷ்ண பாகவதர் அவர்களால் ரயிலடியிலும், ஸ்ரீஜத் அரண்மனை ரெங்கஸ்வாமி அய்யர் அவர்களால் மகாமகக் குளக்கரையிலும் அரண்மனைகளுக்கொப்ப இரு சத்திரங்கள் கட்டப்பட்டு அன்னதானமும் நடந்து வருகிறது.

அவ்விரு சத்திரங்களிலும் சமஸ்தானதிபதிகளும், மகாராஜாக்களும் தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் வந்து தங்குவதற்கும் போதிய இடவசதிகள் உண்டென்றால் அவைகளின் அமைப்பையும் விஸ்தீரணத்தையும் குறிப்பிடவும் வேண்டுமோ?

§ ஜில்லடி. வெ. பத்ருசாமி அய்யர்: "சமூக முதல் மகாநாட்டின் சிருஷ்டி கர்த்தாவெனப் புகழப்படுபவரும்", "குடந்தை மித்திரன்" ஆசிரியரும், ஸம்ஸ்க்ருத வித்யாலய ஸ்தாபகரும், ஸந்தியாவந்தன பாஷ்யத்தைப் பிரசுரித்தவரும், அரசலாற்றுக்குப் படித்துரை கட்டியவரும் இவரேயாம்.

## காவ்யமும் கவிநயமும்

ஸ்ரீமத் வால்மீகி பகவான் காயத்ரீ மஹா மந்திரத்தை யுள்ளடக்கிய இருபத்து நாலாயிரம் கிரந்தங்களை ஏழு காண்டங்களாக வகுத்து ஸம்ஸ்க்ருதத்தில் இயற்றியருளிய இராமாயண மஹா காவ்யத்திற்கிணங்க, நமது கவியரசர் ஸௌராஷ்ட்ர பாஷையில் * **ஸ்ரீமத் ஸௌராஷ்ட்ர ஸங்கீத ராமாயணத்தையும்**, ஸ்ரீமத்பாலராமாயணத்தையும், பாரத பாகவதாதி புராணங்கள், வியாகரணம், அமரம், ஸப்த மஞ்சரி, தர்ம சாஸ்திரம், ஜோதிஷம், கணித சாஸ்திரம், பூகோள சாஸ்திரம், நளோபாக்யானம், நாச்சாரம்ம சதகம், தத்தாத்ரேய மந்த்ர தந்த்ர கல்பம், தன்வந்திரி சாணக்கியாதி வைத்திய சாஸ்திரங்கள், ஸாலக்கிராம மஹிமை, ராமாளி, கிருஷ்ணாளி முதலிய அநேக நூல்களையும் ஸ்லோகங்களாகவும், கீர்த்தனைகளாகவும் இயற்றியருளியுள்ளார்.

அவைகளில் இராமாயண காவ்யம் மிகச் சிறப் புடையது. அஃது வேங்கடஸூரி ராமாயணமெனும் புகழுடன் இலங்குகிறது. இதர ராமாயணங்களிலுமில்லாத சுவை அதில் மிகுந்திருப்பதால் அதற்கோர் தனிப்பெருமை யுண்டு.

---

* இந்த ஸங்கீத ராமாயணத்தைக்கற்று, ஆராய்ந்து ரசிகரான லண்டன், ஒயிட் ஹால், இந்தியா ஆபீஸ் லைப்ரேரியன் ஸ்ரீ H. N. ராண்டில் (Mr. H. N. Randle) என்பார் தெரிவிக்கும் அபிப்பிராயம்:– "The most valuable of the works which have been printed is, I suppose, Venkatasuri's Sourashtra Sangeeta Ramayana".

மேலும், ஹரிகதா காலக்ஷேபத்திலும் ஸங்கீதத்திலும் தனக்கு நிகரில்லையென ஜெயக்கொடி நாட்டித் திக்விஜயம் செய்து மாக்ஷிமிக்க மைசூர், திருவிதாங்கூர் ராஜாங்கங்களில் மஹாராஜாக்களை ரஸிக்கச் செய்து மஹத்தான ராஜ பூஜித ஸன்மானங்களைப் பெற்றவரும், மனோஹர மன்மத ஸ்வரூபியுமான மஹாவித்வான் ஸ்ரீஜத் **பாலு. சுப்பய்ய பாகவத**ரவர்களின் வேண்டுகோளுக்கிசைந்து கதா கால க்ஷேபங்களுக்குத்தக்கபடி நவீன முறையில் * **"தாமரைத் துவஜன் சரித்திரம்" "ருக்மணீ கல்யாணம்" "சக்குபாய் சரித்திரம்"** முதலியவைகளை மஹாராஷ்ட்ர பாஷையி லிருந்து மொழி பெயர்த்து ஆந்திர பாஷையில் கீர்த்தனை களையும் ஸ்லோகங்களையும் சிட்டாவாகயியற்றிக்கொடுத்துப் புகழ் நிலவச் செய்தவரும் நம் கவீஸ்வரரேயாம். இதிலிருந்து ஸ்ரீஸ்வாமிகளுக்கிருந்த ஆந்திர பாஷா விற்பன்னமும் நன்கு புலனாகும்.

நம் கவியரசரால் இயற்றப்பட்டிருக்கும் நூல்கள் கீர்த்தனைகள், பலதிறப்பட்ட குணவந்தர்களுக்கும் பயன் படுவனவாயிருக்கின்றன. அவைகளின் ரசிகம் எளிதில் வர்ணித்துவிட முடியாது. தெய்வபரமாகவும், ஸ்தோத்திர பூர்வமாகவும், ஹாஸ்ய ரசமாகவும், ஸ்திரீ புருஷ சல்லாப ரூபமாகவும் சுகுணோதய நீதி போதனைகள் சித்தரித்து எழுதப்பட்டிருக்கின்றன. அவை யாவும் நம்மவர் வசிக்கும் ஒவ்வொரு ஊரிலும் வியாபித்திருக்கின்றன. அந்தந்த ஊர்களில் சிதறிக்கிடக்கும் கவிதைகளைச் சேகரித்து அவ்

---

* மேற்படி மூன்று சரித்திரக் கையெழுத்துப் பிரதிகள் மதுரை, ஸௌராஷ்ட்ர ஸபை மியூஸியத்தில் இருக்கின்றன.

வவ்வூர் சமூகத் தலைவர்கள் (ஜத்வொ ஔள்டியான்) தங்கள் தங்கள் ஸபைகளின் மூலமாய் புஸ்தக ரூபமாக வெளியிட்டு நம் கவிச் சக்கரவர்த்தியைப் பூஜிக்கும் பாக்கியத்தை விரைவிலடைவோம்.

## சமத்கார கவிதை

இம்மஹான் ஒவ்வொரு சமயத்திலும் சந்தர்ப்பத்திற்கேற்றவாறு சந்தங்களைப் பாடி வைத்திருக்கிறார். அவை சிலா சாசனம்போல் பதிந்துள்ளன. அவைகளிற் சில பின்வருமாறு:—

தேஸத்தைப்பற்றிய கேள்வி வந்தபோது "கி$^{3}$ரிபடணு ஸௌராட் படணு" என்ற பாட்டும், ப$^{3}$ஸ்வண்ணு (கெ$^{3}$ப்$^{3}$பி$^{2}$ள்) என்னும் கோலாட்டத் திருவிழாவைப் பார்த்து "கொ$^{2}$ப்$^{3}$பி$^{3}$ க$^{2}$ளொ" என்ற பாட்டும், ஓரிடத்தில் நடந்த சக்களத்திப் போராட்டத்தையும், அவர்கள் புருஷனோடு செய்யும் ஸம்வாதத்தையும் கேட்டு அவர்களை ராதாருக்மணி கிருஷ்ணராகப் பாவித்துப் பாடியிருக்கும் "இஸகொகொவாடு" என்ற கீர்த்தனையும், கோபிதாரணத்தைப்பற்றிய பாடல்களும், கோபிகைகள் ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டித்த பாவனையாக

"ஸோடி$^{3}$ ப$^{2}$லொ-ஸோடி$^{3}$ பலொ" என்ற பாட்டும்,
"பங்கஜ ஹிதகுல ஸம்ப$^{4}$வஸூரமுனி"
"புஜெகருஸ் தொகொ மீ ஸொடு$^{3}$நாஸ்தோ"
"கொங்கிஸர ஹோனு விரோது$^{3}$"
"கு$^{3}$ரி காரி:யெ வத்தான் கொங்கோ மெணி"
"பொ$^{4}$வெஜெனு ப$^{3}$லமுஸே அம்கோமெணி"

venkata suri svami 1 to 66 101213
Friday, December 13, 2013 8:04:35 PM

"நிகிளவிஸ்-நிகிளவிஸ் நிகிலவி லிமிமொர்"
"கா³மு ஸிங்கார புலகுரு ஸங்கீ³துக"
"காய்ஸே ஜெகதும் கு³ண்ணு"
"மாயி பா³புனுகு அஸ்தஸ்தாஹூடி"
"ஜேம் ஜேம் ஜேம் ஜெய கா²மபுமுஜெ தேவு"

என்பவைபோன்ற அநேக பாடல்களும், லாலி கீதங்களும், பக்திரசக் கீர்த்தனைகள் சரளி வரிசையுடனும் ஏராளமாகப் பாடியிருக்கிறார்.

"ஸ்ரீநரஹரிக் ப⁴ஜனகாரி மன்னு" என்பதும் "மூல்லோ ரக்ஷணி" என ஆரம்பித்து இராமாயணத்தை முழுதும் ஒரே ஸ்லோகத்தில் அடக்கியிருப்பதும் நவமணிகளின் கோர்வைபோலிருக்கின்றன. இவர் வாலாஜா நகர் சென்றிருந்தபோது அந்நகர வாசிகளைக்கோரி "அத்தொதி த³யஸவொகிகா³" என்று பாடிய பாட்டின் கடைசி சரணத்தில் நம் ஸங்கீத குருநாதரான ஸ்ரீமத் * **வேங்கடரமண பாகவதஸ்வாமி** அவர்களின் சந்நிதி சென்று ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனைகளைக் கேட்டுச் சுகித்து வந்ததாகவும் பாடியிருக்கிறார். அவையாவும் பாஷா ஸ்வாரஸ்யத்தை விளக்குகிறது.

---

* இவர், திருவாதி ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிகளின் பிரதம சிஷ்யரும், ஷை ஸ்வாமிகளின் பேரில் மங்களாஷ்டகம் பாடியவரும், ஸௌகா சரித்திர மூல கிரந்த கர்த்தாவும், அநேக கிருதிகளைத் தாமியற்றித் தியாகராஜ ஸ்வாமிகளின் முத்திரையுடன் குரு காணிக்கையாகச் சமர்ப்பித்துப் பூர்ண அநுக்கிரகம் பெற்ற ஸங்கீத ஸ்வர ஜோதியாம்.

## ஸ்வதேஸ யாத்திரை

ஸ்ரீஸ்வாமிகள் தமது மாத்ரு பூமியாகிய ஸௌராஷ்ட்ர தேஸ யாத்திரையையும் முடித்துவிட வேண்டுமென்ற சங்கல்பத்துடன் வாலாஜா நகரிலிருந்து கடைசியாக * "த$^{4}$னமு ஜிவ்னமு லோகுகு (காஸன்னவ்ஹால்) த$^{4}$னமு" என்ற பாட்டின் கடைசியடியில் "ஏ த$^{4}$ரிர் வேங்கடஸூரி காஸிகு தா$^{3}$ஸூனுக் கோ$^{3}$தா$^{3}$வரி ஸ்நாநா:லு தி$^{3}$வ்ய பதம்" என்ற பாட்டைப்பாடிவிட்டு, சென்னை, நந்தியால், கிஷ்கிந்தை, துங்கபத்திரை, விஜயநகரம், பண்டரிபுரம், பம்பாய், நாசிக், பஞ்சவடி, நர்மதை, துவாரகை, சோமநாத், ராஜகோட், தேவகிரி முதலிய ஸௌராஷ்ட்ர இராஜதானியிலுள்ள எல்லா ஸ்தலங்களையும், பட்டணங்களையும் தரிசித்துவிட்டு அவந்தியிலிருந்து அலகாபாத் மார்க்கமாய் ஸ்ரீகாசிக்குப் புறப்பட்டார்.

---

* (த$^{4}$னமு ஜிவ்னமு லோகு$^{3}$கு-என்ற பாட்டின் கடைசி சரணம்.)

நருனுதிகரஸ்தெ ஹீடா$^{3}$ஹீடி$^{3}$னு
கரிலேதுரி:யெ த$^{4}$னமு — பொ$^{4}$
தி$^{3}$ரினுகு தரினுகு லொளஹோ லெங்கு$^{3}$மு
ராதிபு$^{2}$ரொஹொவாடி$^{3}$னு த$^{4}$னமு — ஸொர்க
பொ$^{4}$ரெமாஸூக் மாஸூக் கெள்தர்வுஜினத்$^{3}$தி$^{3}$க்
து$^{3}$ர்போளுக்பு$^{3}$வ்டி$^{3}$ணி த$^{4}$னமு — யே
த$^{4}$ரிர்வேங்கடஸூரி காஸிகுதா$^{3}$ஸூனுக் கோ$^{3}$தா$^{3}$
வரிஸ்நாநா:லு தி$^{3}$வ்யபத$^{3}$விதே$^{3}$ஸ்தோ. (த$^{4}$னமு)

கெள்தர் = வட்டி.

## வானப்பிரஸ்தமும் ஸந்நியாஸமும்

இவ்வாறு யாத்திரா மார்க்கமாய் வனங்களிலே தங்கித் தவம் செய்துக்கொண்டு புண்ணிய க்ஷேத்திரங்கள் பல கடந்து ஸ்ரீகாசிக்குப் போய்ச்சேர்ந்தார். கூடச் சென்றிருந்த இவரது ஏக புத்திரரான காசிவாசி **ஸ்ரீநரஸிம்ம ஸர்மா** அவர்களை வித்யாப்யாசத்திற்காக வாரணாசியில் ஓர் ஆசிரியரிடம் ஒப்புவித்துவிட்டு, இவர் சந்நியாச மனதுடன் நேபாளம் முதலிய க்ஷேத்திரங்களில் யாத்திரை செய்யலானார்.

## வரகவிக்கு வானரோபசாரம்

வாலி சுக்கிரீவர் பட்டணமாகிய கிஷ்கிந்தைக்கு இவர் சென்றிருந்தபோது இவருக்கு சிசுருஷை செய்வதில் பேரன்புடையவரும், சொந்த பந்துவுமான வேங்கடராமய்யங்கார் (கஸி ஐயொ) என்னும் பக்தர் உடன் உதவியாயிருந்து சகல சௌகர்யங்களும் செய்துவந்தார்.

அப்பட்டணத்தின் மலையடிவாரத்து வனத்தில் இவர்கள் ஓர்நாள் தங்கியிருக்குங்கால் இம்மஹா கவிராயர் தாமியற்றிய ஆஞ்சநேய ஸ்தோத்திரம், ஆஞ்சநேய பராக்கிரமம் ஆகிய பாடல்களைப் பக்திப்பரவசமாய்ப் பாடிக்கொண்டிருந்தனராம். அப்போது அங்கு எதிர்பாராதவண்ணமாய் நூற்றுக்கணக்கான பெரிய பெரிய வானரங்கள் இவருடைய இன்னிசைப் பாடல்களைக் கேட்டு ஆனந்தக்கூத்தாடி அஞ்சலியஸ்தத்துடன் சூழ்ந்துகொண்டு இவர்கள் மனக்கலக்கமும் பீதியும் அடையா

திருக்கப் பணிவான சைகை காட்டி ஸ்தோத்திர கீதங்களைக் கேட்டுக்கொண்டே நின்றிருந்து சற்று நேரத்திற்குப்பின் அக்கபிகள் அங்குமிங்கும் ஓடிப்போய் கவீஸ்வரருக்கு இனிய ரசம் நிறைந்த கனி வர்க்கங்களைக் கொண்டு வந்து சமர்ப்பித்து வணங்கித் தம் யதாஸ்தானம் அடைந்தனவாம்.

## மோக்ஷம்

பின்பு இவர் நேபாளம் சென்று மஹாராஜாவின் ஆதரவு பெற்றுப் பல க்ஷேத்திரங்களையும் கடந்து யமுனா நதி தீரத்திலுள்ள ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தையடைந்து தபோதனராகித் தம் யோக வல்லமையினால் கலி 4991-க்கு (இங்கிலீஷ் 1889) ஸௌராஷ்ட்ர விஜயாப்தம் 577 விக்ருதிஸூ புரட்டாசிமீ 20உ சனிக்கிழமை மிருகசீரிஷ நக்ஷத்திரத்தில் (72-வது வயதில்) பரமபதமடைந்தார்.

இம்மஹானின் புண்ணிய சரீரத்தை யமுனாநதி தீரத்தில் மிக வைபவத்துடன் அடக்கம்செய்து அவ்விடத்தில் பிருந்தாவனமுண்டாக்கி விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. வடதேச யாத்ரீகர்கள் அப்புனித ஸ்தலத்திற்குச் சென்று தரிசித்தும் வருகின்றனர்.

---

## ஸஹாப்தங்கள்.

இங்கிலீஷ் வருஷத்தில்

3102-சேர்க்க — கல்யப்தமாகும்
85-சேர்க்க — விக்ரம ஸகாப்தமாகும்
852-கழிக்க — கொல்லமாண்டாகும்
591-கழிக்க — பசலியாகும்
77-கழிக்க — சாலிவாகன சகாப்தமாகும்
1312-கழிக்க — ஸௌராஷ்ட்ர விஜயாப்தமாகும்
1869-கழிக்க — காந்தியாப்தமாகும்.

## திருநக்ஷத்திர வைபவம்

குடந்தை மா நகரின்கண் விளங்காநின்ற ஸ்ரீபிரம்மன் கோவில் என்னும் பெயர்பூண்ட ஸ்ரீலக்ஷ்மீ நரசிம்மஸ்வாமி சந்நிதியில், ஸாதாரண௵ புரட்டாசிமீ 9௳ ஞாயிற்றுக் கிழமை திருநக்ஷத்திரத்தன்று ஸ்ரீ ஸூரி ஸ்வாமிகளின் சிஷ்யர்களாகிய ஸ்ரீவைஷ்ணவ ஆசார்ய ஸ்வாமிகளான ஸ்ரீவில்லிபுத்தூர் கோடி கன்னிகாதானம் **ஸ்ரீநிவாஸ தாதாச்சாரியார்** அவர்களாலும், அனந்தஸயனம் ஸ்ரீ **பத்மநாபாச்சாரியார்** அவர்களாலும் குரு ஸ்தோத்திரங்கள் செய்யப் பட்டும், தனியன் ஸ்லோகங்கள் பாடப்பட்டும் குருபூஜா வைபவத்தைச் சிரத்தையுடனும் சிறப்பாகவும் நடத்தி மஹா சமாராதனைகள் செய்து ஸ்ரீஸூரி ஸ்வாமியின் திவ்யாநுக்கிரகப் பிரசாதத்தை யடைந்தனர்.

---

**ஸ்ரீவில்லிபுத்தூர் கோடி கன்னிகாதானம்**
**ஸ்ரீ ஸ்ரீநிவாஸ தாதாச்சாரியாரவர்களால் செய்யப்பட்ட தனியன்.**

**ஸ்ரீகாஶ்யபாந்வயபயோதிஸுதாமயூகம்**
**வேதாந்தஸாரரஸிகம், நயநாபிராம-**
**ஸர்வம் ஸமஸ்தநிகமாந்த ஸாஹித்ய**
**ஸத்ப்ரக்ருதிம்,। ஸ்ரீராம வேங்கடஸூரி**
**நாம ஸஹிதம் ஸௌராஷ்ட்ர விப்ர**
**திலகம், ஸௌம்யாநுரூப ஹ்ருதய ஸம்பத்**
**ஸகலம் வந்தே குருஞ் ஸ்ரீ ஸாதம்॥**

---

ஸ்ரீஸ்வாமிகளின் தாஸாநுதாஸர்கள்:—

ஸ்ரீ ரெ. வெ. பலராமய்யர், ஸ்ரீ ரெ. அ. ரும. ரெங்கசாமி அய்யர், ஸ்ரீ ஜி. ரா. ரெங்கசாமி அய்யர், ஸ்ரீ அ. ச. ராமய்யர், ஸ்ரீ ஜி. ரா. பத்ருசாமி அய்யர் ஆகிய ஐந்து கனவான்களாம்.

திருக்குடந்தை
ஸ்ரீ பண்டரிநாதர் ஸன்னிதியில்
ஸ்ரீ ஸூரி ஸ்வாமி விக்ரஹம்

## *ஸ்ரீமத் வேங்கடஸூரி தேஸிகர் சந்நிதி

ஸ்ரீ குருஸ்வாமிகளின் தெய்வீக சம்பத்தையறிந்த சிஷ்யர்களிலொருவரும், வைதீக ஸீலரும், மதுரையில் நடைபெற்ற முதலாவது ஸௌ. பி. வர்ணாஸ்ரம தர்ம மஹாநாட்டின் அக்ராசனருமான ஸ்ரீஜத் **ஜில்லடி. ரா. சாமி அய்யர்** அவர்களால் கும்பகோணம் ஆற்றங்கரை வழி நடப்புத்தெரு ரெங்கியான் அக்கிரகாரத்திலுள்ள ஸ்ரீபண்டரிநாதர் ஆலயத்தில் ஸ்ரீமத் **வேங்கடஸூரி தேசிகர்** விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டு மூலவருக்கும் உத்சவருக்கும் திருவாராதனைகள் நடந்து வருகின்றன.

பக்தகோடிகள் சந்நிதி சென்று தரிசித்து அபீஷ்ட ஸித்தி யடைகின்றனர்.

---

அனந்த சயனம், உ. வே. ஸ்ரீ பத்மநாபாச்சாரியார் அவர்களால் செய்யப்பட்ட தனியன்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ||

---

* மேற்படி ஸந்நிதியை உத்தாரணம் செய்யும் விஷயமாய்க் கவனித்துவரும் க்னவான்களின் நன்னோக்கம் விரைவில் நிறைவேறப் பிரார்த்திக்கப்படுகிறது.

## ஜயந்தித் திருநாள்

மதுரை மஹாஜனங்கள் ஸ்ரீஸூரி ஸ்வாமி ஜயந்தி தினத்தை மஹோத்ஸவமாகக் கொண்டாடி 10 நாட்களில் பஜனை, கச்சேரி, கதாப்பிரசங்கம் முதலிய காலக்ஷேபங்கள் நடத்தி ஸ்ரீஸ்வாமிகளின் திருவுருவப் படத்தை ஊர்வலம் செய்து சமாராதனைகள் நடத்தி குருகடாக்ஷத்தைப்பெற்று சுகவாழ்வு வாழ்கின்றனர். பிற ஊர் பக்தர்களும் ஸ்ரீகுரு ஸ்வாமிகளைப் போற்றி வரப்பிரசாதங்களடைவார்களாக.

இப்புனித மூர்த்தியின் திவ்ய சரித்திரத்தைப் படிப்போரும், கேட்போரும், பிரசங்கிப்போரும், இராமாயண கிருதிகளைப் பாடுவோரும் ஸர்வாபீஷ்ட சித்திகள் பெற்று இகபர சுகம் அனுபவிப்பார்களாக.

சுப⁴மஸ்து.

### கு³ரு ஸ்தோத்ரு.

கைலாஸேஸ்வருலெக்த கெ³ங்க³ மகினிம்
பா⁴கீ³ரதீ² ஹொய்யவி

பு²ள்ளஜ்ஜானுகுதே ப⁴கீ³ரத² பதீ
ஜன்மோத்தரண்ணீன் ஸொகன் ।

வாணீவாக³ம்ருத ப்ரவாஹூமு தொகன்
ஸௌராஷ்ட்ர வித்³யாந்தி³யெ

ஸ்ரீமத்³ வேங்கடஸூரி வர்யுனுகபுல்
வந்து³ஸ்ஸதா³ ப⁴க்திரு ॥

— ஸ்ரீமத் கவி லக்ஷ்மணஸூரி.

# அநுபந்தம்

## நம் கவிச்சக்கரவர்த்தியாரின் நூல்களைப்பற்றிய விஷயங்களும், பாஷா சம்பந்தமாயுள்ள சில விசாரணைக் குறிப்புகளும்.

---

ஸ்ரீமத் ஸௌராஷ்ட்ர பால ராமாயணத்தையும், ஸங்கீத ராமாயணத்தையும் ஆந்திர லிபியில் (1904-1905ல்) பிரசுரம் செய்த மதுரை ஸௌராஷ்ட்ர பாஷாபிவர்த்தனி ஸபை உறுப்பினர் பன்னிருவர்.

| | | | |
|---|---|---|---|
| * | ஸ்ரீஜத் | K. V. ராமாச்சாரியார் B. A. | அவர்கள் |
| * | ,, | தொ. சி. மு. சேஷய்யர் | ,, |
| * | ,, | சி. மு. வெங்கடாசலபதி அய்யர் | ,, |
| * | ,, | கெ. சு. பா. நன்னுசாமி பாகவதர் | ,, |
| * | ,, | V. S. முத்துகிருஷ்ணய்யர் | ,, |
| * | ,, | நா. ம. சுந்தரராமய்யர் | ,, |
| * | ,, | அ. கி. ஹ. மீ. நா. அ. ரா. நாகய்யர் | ,, |
| ○ | ,, | K. S. சேஷய்ய பாகவதர் | ,, |
| * | ,, | D. லக்ஷ்மண பாகவதர் | ,, |
| * | ,, | N. K. இராமலிங்கய்யர் | ,, |
| * | ,, | சி. சு. பா. குப்புஸ்வாமி அய்யர் | ,, |
| ○ | ,, | எல். கே. துளசிராம் B. A., B. L., | ,, |

இப்பன்னிரு திருக்கூட்டத்தார், தங்கள் ஸபை மூலமாய் சமூகத்திற்கும், பாஷைக்கும் செய்திருக்கும் மஹத்தான ஸேவையை மஹாஜனங்கள் எக்காலும் மறக்கமுடியாது.

---

* பதின்மர் விண்ணுலக வாசிகள்.

**நாச்சாரம்ம சதகம்:—** (கையெழுத்துப் பிரதி) இஃது மதுரை மால் ஹனுமார்கோவில் தெரு, புரோஹிதம் பிரஹ்மஸ்ரீ **ரா. வேங்கடராமய்யங்கார்** அவர்களிடமுள்ளது.

**இராமாயண வசனம்:—** (கையெழுத்துப் பிரதி) ஆறு ஸர்க்கம் மதுரை பிரம்ம வித்யாஸ்ரம ஸபா புரோஹிதர் பிரஹ்மஸ்ரீ **நா. ராமாச்சாரியார்** அவர்களிடமிருக்கிறது.

**தமிழ் எழுத்தில் ஸூரிஇராமாயணம்:—** இஃது முதலாவது ஸௌராஷ்ட்ர ஸாஹித்ய ஸம்மேளனத்தில் ஸமூகப் பிரமுகர்களின் திருவுருவப்படத் திறப்பாளரும், ஸ்ரீவேங்கடகுப்பார்யர் ஸ்வபாஷையில் இயற்றிய நலுங்கு ஸோபன கீதத்தை தமிழ் எழுத்தில் பிரசுரித்தவருமான ஸ்ரீஜத் வாழைக்கொண்டா. **ஸ்ரீநிவாஸய்யர்** அவர்கள் ஸ்ரீஸூரி ராமாயணத்தை தமிழ் எழுத்தில் எழுதியுள்ளார்.

---

**ஏடு-ஓலைச்சுவடிகள்:—** ஸ்ரீஸூரி ஸ்வாமிகள் கைப் பட எழுதப்பட்ட பற்பல விஷயங்கள் அடங்கிய சுவடி களும், காகிதப் பிரதிகளும், மதுரை கான்பாளையம் 4-வது தெரு, ஸ்ரீஸூரி ஸ்வாமிகளின் பௌத்திரர்களும், காசிவாசி ஸ்ரீ **நரசிம்ம ஸர்மா** அவர்களின் புத்திரர்களுமான ஸ்ரீ **சுப்புராம ஸர்மா**, ஸ்ரீ **நாராயண ஸர்மா** அவர்களிடம் இருக்கிறது.

---

**லாலி கீதம்:—**சிறந்த பாஷாபிமானியும், மாருதி விஜய ரங்க ஸபா என்னும் ஸ்வபாஷா நாடக ஸபையின் அதிபரு மான ஸ்ரீ **அ. கி. வெ. ராமராய்** அவர்களால் கிரந்தம் கலந்த தமிழ் எழுத்தில் லாலி கீதமும், ஸீதா கல்யாண சரித்திர மும் அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது.

**நாகர லிபியில் தர்ஜ்மா:—** ஸ்ரீஸூரி ஸ்வாமிகளுடைய கிரந்தங்களேயும், ஸௌராஷ்ட்ர கலாநிதிகளான ஸ்ரீஜத் * **பண்டித லக்ஷ்மணச்சாரியார்,** ஸ்ரீ ஸ்ரீநிவாஸாச்சாரியார், ஸ்ரீ பு³ட்³டா³ன் அழகரார்யர், மேதாவி ராமராய் முதலிய மஹான்களால் புராதன ஸௌராஷ்ட்ர லிபியில் எழுதப்பட்டிருக்கும் நூல்களே, ஸ்ரீராமராய் அவர்களின் பிரதம சிஷ்யரும், மாத்ரு பாஷையில் பாண்டித்யமிக்க உபாத்தியாயரும், முதலாவது ஸௌராஷ்ட்ர ஸாஹித்ய ஸம்மேளனத்தின் காரியதரிசிகளிலொருவருமான § ஸ்ரீ **தொ³ப்பென். சு. வெங்கடாசல ஸர்மா** அவர்கள் நவீன ஸௌராஷ்ட்ரம் எனப்படுகிற தேவநாகரி லிபியில் எழுதி வருகிறார்கள்.

---

ஸ்ரீஸ்வாமிகளால் புராதன ஸௌராஷ்ட்ர லிபியில் லித்தோ அச்சு யந்திரத்தில் பதிப்பித்து வெளியிட்ட பாட புஸ்தகங்கள் மூன்றும், நளோபாக்கியானமும் காண அரிதாயிருக்கிறது. அப்பிரதிகளே வைத்திருக்கும் நண்பர்கள் மதுரை ஸௌராஷ்ட்ர ஸபை மியூஸியத்திற்கு அனுப்புதல் நலம்.

---

* பண்டித ஸ்ரீ லக்ஷ்மணச்சாரியர்:— சென்னே கிருஸ்டியன் காலேஜ் ஸம்ஸ்கிருத பண்டிதர். இவரால் 1880-ம் வருஷத்தில் பிரசுரிக்கப்பட்ட ஸௌராஷ்ட்ர ஸம்க்யாவளி என்னும் கணித புஸ்தகம் ஒன்று மட்டும் கிடைத்திருக்கிறது.

§ தற்போது ஸ்ரீ வேங்கடாசல ஸர்மா அவர்களின் உதவியைக்கொண்டு பாஷா சம்பந்தமான விஷயங்களேச் சேகரித்துக்கொள்வோமாகில் எதிர்கால பாஷா சம்பந்தமான பிரஸ்னேகளில் கவலேயின்றி யிருக்கலாம். காலம் தாழ்த்தாது தக்கோர் இக்கார்யத்தில் அக்கறை கொள்வார்களாக.

**காவ்ய கீத ஸேகரம்:—** ஸ்ரீஸ்வாமிகளால் இயற்றப் பட்ட தனிப்பாடல்களும், நீதிக் கீதங்களும், ஸ்லோகங் களும், காவ்யங்களும், தஞ்சை மானம்புச் சாவடித்தெரு, ஸங்கீத உபாத்தியாயர் ஸ்ரீ **வ. ரெ. நா. குப்புஸ்வாமி பாகவதர்** அவர்களால் சேகரிக்கப்பட்டு வருகிறது. இக் கைங்கர்யத்தில் ஈடுபட்டு சலியாது உழைத்துவரும் ஸ்ரீ பாகவதர் அவர்களின் முயற்சி போற்றத்தகும்.

---

ஸ்ரீஸ்வாமிகளின் சிஷ்யர்களில் ஒருவரான திருபுவனம் ஸ்ரீஜத் **கன்னி. நா. திருமலை பாகவதர்** அவர்களிடம் கையெழுத்துப் பிரதிகளும் ஏடுகளும் இருக்கின்றன. அவைகளை மியூஸியத்திற்கு உதவ மனமிறங்காதிருக்கிறார்.

---

ஸ்ரீ **ஜே. கே. பாலஸ்வாமி அய்யர்** (உபமன்யா) இவர் ஸ்வபாஷாபிவிர்த்திக்கு மிகுதியாக உழைத்தவர். ஸ்ரீஸூரி ஸ்வாமிகளின் பால ராமாயணத்தை நாகரீ லிபியில் எழுதிய வர், ஸெளராஷ்ட்ர அகராதி எழுத ஆரம்பித்தவர்.

---

**புஸ்தகப் பிரசுரங்கள்:—** ஸ்ரீ ஸூரி ஸ்வாமிகளின் அன்பரும், "ஸெளராஷ்ட்ர" பத்ராதிபரும், வித்யாபூஷண ஸாஹித்ய ஸரஸ்வதியுமான ஸ்ரீஜத் **வி. கே. நன்னய்யர்** அவர்கள் நம் பாஷையில் ஸ்ரீஸூரி ஸ்வாமிகளின்பேரில் குரு ஸ்தோத்திரங்களும், நாகரீ லிபியில் * ஸெளராஷ்ட்ர பால போதனை 1920ம்-வருஷத்தில் வெளியிட்டும் நாம ராமாயணமும், பகவத்கீதா ஸ்லோகங்களும் இயற்றி சமூகத் திற்கும் பாஷைக்கும் அரிய சேவை செய்தவர்.

---

* (ஸெளராஷ்ட்ர ஸாஹித்ய பரிஷத் உதவி)

ஸௌராஷ்ட்ர மேதாவி ஸ்ரீ தொ. மு. ராமராய் அவர்கள் இயற்றிய "நீதி ஸம்பு" என்னும் நீதி நூலையும், "ஸௌராஷ்ட்ர சிக்ஷாவளி" என்னும் பால பாட புஸ்தகத்தையும் சென்னை, மெஸர்ஸ். நா. ம. சு. சதாசிவய்யர், கிருஷ்ணய்யர் அவர்கள், பிரஹ்மஸ்ரீ திரு. நா. ரெ. கோபாலய்யர் அவர்கள் புரிந்த நன்கொடையால் ஸ்ரீ. N. R. **குப்புஸ்வாமி (வைநாயகி)** அவர்களால் நாகரீ லிபியில் 1924-ம் வருஷத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

---

ஸ்ரீமத் மேதாவி ராமராய் அவர்களின் சிஷ்யர் **ஸ்ரீ நா. ஆ. சு. ரெங்கய்யர்** புராதன ஸௌராஷ்ட்ர லிபியில் ஸௌராஷ்ட்ர பாலபோதினியும், சுளு கிரியா வல்லரியும் இயற்றி 1916-ஷூத்தில் வெளியிட்டிருக்கிறார்.

| ★ புராதன ஸௌராஷ்ட்ர லிபி ★ | [illegible] | ★ சுளு கிரியா வல்லரி மாதிரி ★ |
|---|---|---|

மதுரை ஸௌராஷ்ட்ர ஹைஸ்கூல் தமிழ் பண்டிட் ஸ்ரீஜத் **குப்பா. சே. சுப்பய்யர்** அவர்களின் சிஷ்யரும், ஸௌராஷ்ட்ர ஞானோதய ஸபா ஆசிரியருமான ஸ்ரீ **ஜானகி. ராம. வேங்கடகுப்பார்யர்** ஸ்வபாஷையிலும், தமிழிலும் அநேக கவிகள் பாடியிருக்கிறார். அவைகளில் ஸ்ரீபிரஸன்ன வேங்கடேஸ்வரர் பிரம்மோத்ஸவக் கும்மி (தமிழ்) யும், மத்வமதப் பிரகாசினி (ஸ்வபாஷை) யும்தான் பிரசுரமாயிருக்கின்றன.

---

**ஸ்வபாஷா கைங்கர்யம்:—** ஸௌ. ஹைஸ்கூல் தமிழ் பண்டிட் ஸ்ரீ குப்பா. சுப்பய்யர் அவர்கள் சிஷ்ய பரம்பரையைச்சேர்ந்த கதாப்பிரசங்க வித்வான் ஸ்ரீ **பாருண்டான் ஐயங்கார்** என்ற வேங்கடகிருஷ்ண பாகவதர் அவர்கள் ஞானோதய ஸபா காலந்தொட்டு நாளது வரையில் ஸ்வ பாஷா கைங்கர்யத்தில் ஈடுபட்டு சுமார் 21 சரித்திரங்கள் வரையில் இயற்றிக் காலக்ஷேபங்கள் செய்தும், பிரசங்கித்தும் வருகிறார். எளிய நடையிலும் ஸ்பஷ்டமாகவுமுள்ள இவருடைய கவிதைகள் எல்லோராலும் விரும்பப் படுகிறது. பாஷைக்கும் புதிய உற்சாகமூட்டியவரெனச் சந்தேகமின்றி இவரைச் சொல்லலாம்.

---

**ஸ்ரீபிரஸன்ன வேங்கடேஸ ஸதகம்:—** இஃது ஸௌ. ஹைஸ்கூல் தமிழ் பண்டிட் ஸ்ரீ குப்பா. சுப்பய்யர் அவர்கள் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவரும், ஸௌ. பி. ஸுகுணோதய ஸபா ஆசிரியருமான ஸ்ரீ வை. அ. வேங்கடேஸ்வர பாகவதரின் மாணாக்கரும், ஷை. ஸபையின் உதவி ஆசிரியருமான ஸ்ரீ **S. S. ராமய்யர்** (ஞானம்ருத கீதாசிரியர்) ஸ்வ பாஷையில் அழகான நடையில் இயற்றி வருகிறார்.

**ஸ்ரீ கவி சாரங்கபாணி பாகவதர்** இவர், வித்வான் ஸ்ரீ பாலு. சுப்பய்ய பாகவதரின் அநுஜரும், ஸ்ரீ ராமியா. முனிகுப்பு பாகவதரின் சிஷ்யருமாவர்.

இவர் வாலாஜாநகரில் குருகுலவாஸம் செய்து, சங்கீதத்திலும், கதா காலக்ஷேபம் செய்வதிலும், கவி பாடுவதிலும் சிறந்து விளங்கினவர்.

இவரியற்றிய ஸ்வபாஷா கவிதைகள் ஸ்ரீஸூரி ஸ்வாமிகளைப் பின்பற்றினதாயும், ஸ்ரீ லக்ஷ்மணஸூரி, ஸ்ரீ சுந்தரார்யர் (அழகர்தாஸ்) முதலியவர்களின் கவிதைகளைப் போன்று லக்ஷணமாயும், புலமை மிக்கதாயும் இருக்கின்றன. இவர் ஸௌராஷ்ட்ர பாஷையில் குசேலோபாக்கியானம், துருவ சரித்திரம், ருக்மாங்கத சரித்திரம், சீதா கல்யாணம் முதலிய சரித்திரங்களும், ஸௌராஷ்ட்ரம், ஸம்ஸ்க்ருதம், ஆந்திரம், திராவிடம் ஆகிய பாஷைகளில் பக்திரசக் கீர்த்தனைகளும் இயற்றியிருக்கிறார்.

---

கும்பகோணம் ஸ்ரீஜத் **குள்ளா. கிருஷ்ண பாகவதர்** அவர்களால் நம் பாஷைப் பதங்கள் சுமார் 2000 வரை எழுதிவைக்கப்பட்டிருக்கிறது.

---

பாஷாபிவிர்த்திக்கு அகராதியே முக்கிய சாதனமாம். அதைத் தயாரிக்க வித்வான்கள் முற்படவேண்டும்.

---

பாஷாபிவிருத்தியில் சிரத்தைகொண்டுழைக்கும் எல்லா அறிஞர்கட்கும் நன்றி செலுத்த ஸௌராஷ்ட்ர உலகம் கடமைப்பட்டுள்ளது.

---

### வார்தா லிபி ஸமீதி ஆராய்ச்சியாளர்,

## ஆசார்ய ஸ்ரீ காகா கலேல்கர்ஜி அவர்கள்

# நம் பாஷை மீது வைத்துள்ள அபிமானம்.

---

.........இது ஒரு சமூக சம்பந்தமான வேலையான படியால் சம்பளமில்லாமல் கௌரவத்தின்பேரில் செய்யக் கூடிய அநேகருடைய உதவி தேவை. தங்களுடைய பாஷையில் மகாராஷ்ட்ரமும், குஜராத்தியும் கலந்திருப்ப தாகத் தெரியவருகிறது. எனக்கு இந்த இரண்டு பாஷை களும் தெரியும். இதனுல்தான் நான் இவ்விஷயத்தில் இவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்ளுகிறேன்.

ஸௌராஷ்ட்ர பாஷையின் வியாகரணம் ஒன்றும், பதங்கள் அடங்கிய அகராதி ஒன்றும், வினைச்சொற்கள் அடங்கிய அகராதி ஒன்றும், Phrases & idioms களும், பழமொழிகளும் அடங்கிய அகராதி ஒன்றும், ஸௌராஷ்ட்ர பாஷையிலுள்ள பாட்டுகள், கதைகள் அடங்கிய புஸ்தகங்களும் தயாரிக்கப்பட்டால் தங்கள் முன்னேர்களுடைய பாஷையின் சாஹித்தியமும் சம்பத்துங் காப்பாற்றப்படும். இத்துடன் அவைகளுடைய சரித்திரங் களும் கிடைத்துவிட்டால் தாங்கள் தங்கள் ஜாதியின் எதிர் கால பிரகாசத்தைப் பார்க்கக்கூடும்.

வார்தா,<br>3-8-'35

தங்களன்புள்ள,<br>காகா. கலேல்கர்.

## மதுரை ஸெளராஷ்ட்ர ஸபா நிர்வாகஸ்தர்கள்.

*பிரஸிடெண்ட்:*

பிரஹ்மஸ்ரீ K. M. S. லக்ஷ்மணய்யர் அவர்கள்

*பொக்கிஷதார்:*

,, C. M. V. கிருஷ்ணமாச்சாரியார் ,,

*கௌரவ காரியதரிசி:*

,, P. S. A. கிருஷ்ணய்யர் ,,

*டைரெக்டர்கள்:*

,, S. S. ராமுடய்யர் ,,

,, நா. சோ. வீரபத்திரய்யர் ,,

,, காளிதாஸ். வே. சீதாராமய்யர் ,,

,, O. K. N. ராஜகோபாலய்யர் ,,

*[29—5—1942]*

ராஜேஸ்வரி பிரஸ், மதுரை.